# யதிராஜ பாதுகா
# यतिराज पादुका



ஆன்மிக மாத இதழ்

மலர் 1    பங்குனிமீ    ஏப்ரல் 1982    இதழ் 8





நாதமுனிகள்—காட்டுமன்னார்கோவில்



ஸ்ரீ கோ. க. வா. அண்ணவிலப்பன்
குமாரவேங்கடாசாரியர் ஸ்வாமி திருமாளிகை
(ஸ்ரீ முதலியாண்டான் ஸ்வாமி திருமாளிகை)
சிஷ்யர்கள் ஸபை வெளியீடு.



தேவப் பெருமாள் ஏகாதசி புறப்பாட்டில் திருவடி
ஸன்னிதி வாசலில் இயல் தொடக்கம்
நமது ஸ்வாமியும் P. B. A. ஸ்வாமியும்
படம் நன்றி—ஸ்ரீராமாநுஜன், காஞ்சி

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமதே வரவரமுநயே நம:

ஸ்ரீ வேங்கடகுரவே நம:

அண்ணுவிலப்பன் திருவடிகளே சரணம்







பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா |
தஸ்ய தாசரதே: பாதௌ சிரஸா தாரயாம்யஹம் ||
ஸ்ரீவைஷ்ணவசிரோபூஷா ஸ்ரீராமாநுஜபாதுகா |
ஸ்ரீவாதூலகுலோத்தம்ஸ: ஸ்ரீதாசரதிரேததாம் ||

# யதிராஜ பாதுகா-8


ஸ்ரீ. கோ. க. வா. அண்ணுவிலப்பன்
குமாரவேங்கடாசாரியர் ஸ்வாமி திருமாளிகை
(ஸ்ரீ முதலியாண்டான் ஸ்வாமி திருமாளிகை)
சிஷ்யர்கள் ஸபை வெளியிடும் ஆன்மிக மாத இதழ்

மலர் 1 துர்மதி - பங்குனி April—1982 இதழ் 8
வருடச் சந்தா ரூ. 10-00 தனி இதழ் ரூ. 1-00



ஆசிரியர்
Dr V V ராமாநுஜன், M A., M. Sc., Ph. D. (Tulane)

இயக்குநர்கள்
ஸ்ரீ K R. ஸத்யம் B.COM., F.C A.
ஸ்ரீ K. K கிருஷ்ணசாமி
ஸ்ரீ K. பாஷ்யமய்யங்கார்
ஸ்ரீ P. K வீரராகவன், B, SC.:

ஆலோசகர்கள்
Dr. K.A மணவாளன் M.A. Ph D.
ஸ்ரீ A ஸ்ரீநிவாஸன்
ஸ்ரீ K B. தேவராஜன் B SC.

68, தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி ● சென்னை-600 005.

# அன்பர்களே!

நாட்டிலேயிருந்து பெருமாளை ஸேவிப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் விச்லேஷபீருக்களாய்ப் போருகிறவர்கள், ஒருகால் ராகத்வேஷம் கொண்டாடி, ஒருவர் ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாதத்தேறவந்து மற்றவருடைய குற்றம் விண்ணப்பம் செய்ய, ஸேவித்திருந்தவர்களிலே சிலர். "அப்படிச் சொல்லலாமா?" என்ன; ஆச்சான்பிள்ளை,—அவர் சொல்லுகிடீர்! தண்டல்படையினனான யமன், ',பரிஹர, என்றான், பிராட்டி "நகச்சிந் நாபராத்யதி" என்றாள், ஈச்வரன் 'செய்தாரேல் நன்று செய்தார்" என்றான். ஆழ்வார்கள் "அவன் தமர் எவ்வினையராகிலும்" என்றார்கள்! இப்படிஇருக்க, அவர்குற்றம் இவரையொழியச் சொல்லுவாரார்? என்று அருளிச் செய்தார்.

வார்த்தாமாலை—238.

ஒருவரையொருவர் விட்டுப்பிரிய ஸஹியாத நெருங்கிய நண்பர்களான இரு ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவர் ஏதோ காரணத்தால் மற்றவரிடம் விரோதப்பட்டு ஆசார்யரான ஆச்சான்பிள்ளையிடம் அவரைப் பற்றி குற்றம் சொன்னதற்கு ஆசார்யரின் கிழ்வெட்டு (sarcasm) கலந்த உயர்ந்த உபதேசம் இது. இந்த வார்த்தையினால் அபவாதம் சொன்ன ஸ்ரீவைஷ்ணவர் திருந்தி நண்பரிடம் க்ஷமை வேண்டி பழையபடி நட்பு பூண்டிருப்பர் என்பதில் ஐயமில்லை.

தண்டிப்பதற்கென்றே ஏற்பட்ட யமன், "எம்பெருமானடியார்களிடம் செல்லாதீர்கள்" என்று தன் ஏவலர்களை ஆணையிட்டுள்ளான். பிராட்டி (ஸீதை) அநுமான் அரக்கிகளைத் தண்டிக்கத் தனக்கு அநுமதிவேண்டியபோது, "யார்தான் குற்றம் புரியவில்லை? மன்னிப்பதே குணம்" என்று உரைத்தாள். இப்படிப்பட்ட பிராட்டியே பெருமாளிடம் யாதுகாரணத்தாலோ "குழந்தை (அடியார்கள்) குற்றம் புரிந்தது; தண்டித்து வையும்" என்றால், "நம்குழந்தையின் குற்றம்தானே? நல்லதாயிற்று" என்பானும். மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களோ, பாகவதர்கள் குற்றத்தை விசாரிக்க யமனுக்கே அதிகாரமில்லை என்றனர். இப்படியிருக்க நாடறிந்த ஸ்ரீவைஷ்ணவரான நண்பரின் குற்றத்தை விசாரிப்பாரில்லாமையாலே இவர் விசாரித்து ஊருக்கறிவிக்கப் புகுந்து விட்டார்—என்றாராம்.

ஆசிரியர்.

ஸ்ரீ:

# நமது ஸ்வாமியின்

# மங்களாசாஸனம்.

**எம்பெருமானார் தரிசனம்** எனப்படும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம் மிகப்பரந்த நோக்கமுள்ளது. நாம் ஒருவர் மட்டும் நற்கதி பெற்றால் போதாது; இவ்வுலகத்திலுள்ள ஸகல ஜீவாத்மாக்களும் பேறு பெறவேண்டும் என்னும் குறிக்கோளுடையது. ''வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொள்மின்'' என்று ஸம்ஸாரிகளை அழைத்து எம்பெருமானுக் காளாகும்படி வேண்டுகிறார் பெரியாழ்வார். ''தொண்டீர் எல்லீரும் வாரீர்'' என்று கைங்கர்யஸாம்ராஜ்யத்திற்கு அழைக்கிறார் நம்மாழ்வார். ஓராண் வழியாக வந்த ஞானபரம்பரையை விரிவாக்க, ''பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமின்'' என்று வரம்பறுத்து நியமித்தார் எம்பெருமானார். ஓராண் வழியாக வந்த உபதேசங்களை யாவரும் அறிந்து உய்யவேண்டும்; தானொருவனுக்குத் தீயகதி ஏற்பட்டாலும் மந்த்ரார்த்தங்களை உபதேசிக்கப் பெற்றவர்களான மிகப்பலர் நற்கதியடைவரே என்ற கருணையுள்ளத்துடன் நம்மிராமானுசன் 74 ஸிம்ஹாஸனாதிபதிகளான ஆசாரியர்களை ரஹஸ்யங்களை உபதேசிப்பதற்காக நியமித்தார்.

பகவத்ஸம்பந்தம் பெற்றவர் ஸகலரும் நமக்கு உத்தேச்யர் என்பதையும், ஆசாரியன் திருவுள்ள உகப்பே நமக்கு மேலான புருஷார்த்தம் என்பதையும் முதலியாண்டான் பலபடியாலும் அநுஷ்டித்துக் காட்டினார், யாவரும் அறிந்து உஜ்ஜீவனம் பெற ஸ்ரீலோகாசார்யர் ரஹஸ்யார்த்தங்களை ஸூத்ரங்களாக அருளிச்செய்ததற்கு விசதவாக்சிகாமணியான மணவாளமாமுனிகள் பெண்ணும் பேதையும், அறியும்படியாக வியாக்யானம் அருளிச் செய்தார். இதுவும் போதாதென்று இவ்வியாக்யானத்திற்கு மூன்று மஹான்கள் அரும்பதஉரைகள் ஸாதித்தனர், ஸ்ரீ சுத்தஸத்வம் ராமாநுஜாசார்யர் என்னும் மஹான் ''ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யம்' என்ற விவரணத்தையும் அருளிச்செய்தார். இதனால் யாவரும் இந்த ரஹஸ்யங்களைத் தெளிவாக அறிவது மிகஅவச்யம் என்று நமது பூர்வர்கள் கருதினார்கள் என்பது விளங்குகிறது.

ஆக, எம்பெருமானாருக்கு முந்திய காலத்தில் ஓராண் வழியாக வந்த அர்த்தங்களைப் பின்னானார் யாவரும் அறிந்து பேறு பெற வேணும் என்ற பெரிய ஸமூஹ நலனைக்கருதி வெளியிட்டது,

'யாவரும் உய்யவேண்டும்' என்ற ஆசாரியர்களின் அவாவின் பணி. ஸ்ரீவைஷ்ணவ மதத்தை ஜனங்கள் தெளிவாக அறிந்தார்களாகில் ஜாதிச் சண்டைகள், வகுப்பு வாதங்கள் இவை எதுவும் ஏற்பட வழியில்லை. கருணையே வடிவான ஆசாரியர்களின் உபதேச வழியே ஸ்ரீவைஷ்ணவம்.

ஸம்ஸ்க்ருதத்தில் 'முசல்' தாதுவுக்கும் மோக்ஷணமும், ஸந ப்ரத்யயத்துக்கு இச்சையும் உப்ரத்யயத்துக்கு இச்சிக்கும் கர்த்தாவும் அர்த்தங்களாகையாலே, மோக்ஷ ராஜ்யமாகிற பரமபதத்தில் ஸ்ரீமந் நாராயணனுக்கு கைங்கர்யம் பண்ணவேணுமென்கிற விருப்பமுடையவனே முமுக்ஷுவாகிறான். இவனுக்கு அறிய வேண்டிய ரஹஸ்யம் மூன்று. பரமபுருஷனிடத்தில் பக்திபிறந்து அதற்கு விருத்தமான ஸம்ஸாரமாகிற ப்ரக்ருதிஸம்பந்தத்தை விடுகையிலே- அதாவது ஸம்ஸார ஸம்பந்தத்தை விட்டு பகவானை அடையவேணும் என்ற எண்ணமுள்ளவன்.

"விசித்ரா தேஹஸம்பத்தி: ஈச்வராய நிவேதிதும்" என்று பகவத்கைங்கர்யத்துக் கென்று ஏற்பட்டதை விடவிரும்பலாமோ? என்னில், அது அநுகூலமாக அமைந்ததாகில் விடவேண்டுவதில்லை. அப்படி அமைவது மிகவும் துர்லபமாகக் காண்கையாலே இப்படிச் சொல்கிறது கூரத்தாழ்வானுக்கு ஆண்டாள் பத்நியாகவும் பட்டர் குமாரராகவும் வாய்ந்தாற்போலவும், துன்னு புகழ்க் கந்தாடைத் தோழப்பருக்கு தேவிகளும் புத்ரர்களும் அமைந்தாற் போலேயும், அப்பாச்சியாரண்ணாவுக்கு ஆய்ச்சி தாயார் போலவும் இருந்தால் "நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே" என்கிறபடி இப்பிறப்பிலே வாழ்வே வைகுந்தமாகும். ஸம்ஸாரத்திலிருந்து வைத்தே நித்ஸூரிகளோடு ஒக்கும் பாக்ய சாலிகளாவார்கள்.

இப்படிப்பட்ட பாக்யத்தைப் பெரியபெருமாளும் பெரியபிராட்டியாரும் ஸகலருக்கும் அருள்வாராக!

மங்களாநி பவந்து!

## 8. மேலும் குணநலன்கள்.

ஸ்ரீபராசரபட்டர் தமது தகப்பனாரிடம் திருவாய்மொழி பயிலும் போது "சிறுமாமனிசர் என்ற சொற்றொடர் நேர்பட, சிறுமையும் பெருமையும் ஒரே மனிதரிடம் எப்படி வாய்க்கும்? என்று தந்தையான ஆழ்வானைக்கேட்க, முதலியாண்டானையும் அவரையொத்த பெரியோர்களையும் காட்டி, இவர்கள்போல வடிவில் சிறுத்தவரும் குணங்களால் வரும் ப்ரபாவத்தில் கனத்திருப்பவரையும் நம்மாழ்வார் சிறுமாமனிசர் என்கிறார் என்பதாக விளக்கினாராம். பகவத் விஷயத்திலும் ஆசார்யவிஷயத்திலும் ஆழ்ந்திருப்பவர்கள் மனிதர்களாயினும் நித்யஸூரிகளோடு ஒப்பர் என்பது கருத்து.

முன்காலத்தில் தளிகைக்குப் பெரும்பாலும் மண்பாண்டங்களையே பயன்படுத்தி வந்தனர். அவைகளின் தூய்மை குறைந்தால் அவற்றை அறவே விலக்கிவிட்டு வேறுபுது பாண்டங்களைக் கொள்வது ஆசாரமாயிருந்தது. ஒரு சமயம் உடையவரையன்றி வேறு தெய்வமறியாத வடுகநம்பி என்னும் பெரியவருடைய இல்லத்திற்குச்சில சுற்றத்தினர் வந்து தங்கநேர்ந்தது அவர்கள் ஸதாசார்ய ஸம்பந்தமில்லாதவர்களாதலால் ஸ்ரீவைஷ்ணவத்வ மில்லாதவர்கள் என்று நம்பி கருத்து. ஆயினும் உறவினர்களாதலால் அவர்கள் தமதில்லத்தில் தங்குவதற்குச் சம்மதித்திருக்க வேண்டியிருந்தது. அவர்கள் சென்றபின்னர், தமதகத்தைத் தூய்மைப்படுத்தி, தளிகைப் பாண்டங்களை அப்புறப்படுத்திவிட்டு, முதலியாண்டான் ஆண்டு கழித்த மண்பாண்டங்களை வேண்டிக்கொணர்ந்து அவைகளைப் பயன்படுத்தலால் நம்பி மனநிம்மதி பெற்றதாகச் சரித்திரம் காண்கிறோம்.

ராமாநுஜரின் சிறியதாயார் குமாரர் கோவிந்தப்பெருமாள். இவர் பால்யத்தில் ராமாநுஜருடன் வேதாந்தம் கற்றவர். பிறகு இவர் கர்மவசத்தால் சைவராகி காளஹஸ்தியில் இருந்தபோது, பெரிய திருமலை நம்பியால் ராமாநுஜரின் வேண்டுகோளுக்கிணங்க வைஷ்ணவராகத் திருத்தப்பட்டு ராமாநுஜருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டவர், வைராக்யபூர்ணராய் இருந்த இவருக்கு எம்பெருமானார் ஸந்யாஸ ஆச்ரமம் தந்து எம்பார் என்று பெயரிட்டு அறிய வேண்டுவனவெல்லாம் உபதேசித்தருளினார். இப்படி அருள் பெற்ற எம்பாரை நோக்கி, "தமது ஆசாரியர்களிடம் படாத பாடுபட்டு பெற்ற பெருமைவாய்ந்த பொருள்களை அவர்பட்டது எதுவும் படாமல் உடையவரருளால் பெற்றீர். மேலும் உம்மைப் பெறுவதற்கென்று நமதாசாரியாரான உடையவர் படாதபாடும்

பட்டார். என்னே உமது பெருமை!'' என்று முதலியாண்டானும் கூரத்தாழ்வானும் உகந்து கூறினராம். பிறர் உற்ற பெருமை கண்டு மகிழ்வது காண்டற்கரிய மஹாகுணமாகும்.

ஆசார்ய பரதந்த்ரராய் வாழ்ந்து வந்த முதலியாண்டானுக்கு ஒரு குமாரர் ஆசார்யகைங்கர்யத்துக்குப் பாங்காக அவதரித்தார், ஸ்வாபிமானமே சிறிது மில்லாத ஆண்டான் அம்மகவை எம்பெருமானார் திருவடிகளில் இட்டுப் பெயர்சூட்டும்படி வேண்ட, உடையவரும், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ நிறம்பியுள்ள அக்குழந்தையை இருகைகளால் எடுத்தணைத்துத் தமது குளிர்ந்த கடாக்ஷத்தால் வாழ்வித்து **இளையாழ்வாரான ராமாநுஜன்** என்று திருநாமமிட்டார். இந்த திருக்குமாரர் பின்னர் **கந்தாடையாண்டான்** என்று ஸ்ரீவைஷ்ணவர் போற்றும் ஆசார்யராய் விளங்கினர். இவரே எம்பெருமானரின் அவதாரஸ்தலமானஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வாமியின் அநுமதிகொண்டு அவர் வடிவை அப்படியே ப்ரதிபலிப்பதான அர்ச்சாரூபியான திவ்யமங்களவிக்ரஹத்தை அவருடைய விபவகாலத்திலேயே ப்ரதிஷ்டைகண்டருளப் பண்ணினர். ஸ்ரீரங்கத்தில் ஸ்வாமியை திருப்பள்ளிப் படுத்திய வஸந்த மண்டபத்தில் (கோவிலுக்குள்) உடையவருக்கு ஸன்னதி நிர்மாணம் பண்ணி விக்ரஹப்ரதிஷ்டையும் செய்வித்தார். அவதாரஸ்தலத்தில் **தானுகந்ததிருமேனியும்** திருவரங்கத்தில் **தானானதிருமேனியும்** கந்தாடையாண்டானின் பெருமுயற்சியால் பின்னானர்களுக்குப் பெருநிதியாய்க் கிடைத்துள்ளன.

ஆசார்யனே உய்வுபாயம். ஆசார்யனிடம் சிஷ்யனுடைய உறவு அவனுடைய மனைவியுடையது போலும் அவனுடல் போலேயும் அமையவேண்டும் என்பர் முதலியாண்டான். மனைவி சொன்னதைச் செய்வாள். உடல் விரும்பியதை (மனதில் நினைத்ததைச்) செய்யும். இப்படி எல்லாவிதத்திலும் ஆசார்யனுக்கு பரதந்த்ரனாயிருப்பதே சிஷ்யன் இருக்கவேண்டிய நிலை. ஆசாரியன் நினைப்பது, செய்வது எல்லாம் ஸாமாந்ய, விசேஷ தர்ம அநுஷ்டான ரூபமாகவே இருக்குமாதலால் சிஷ்யன் வழிதவறிக் கெட வழியில்லை.

ஒரு சமயம் ஆழ்வானும் ஆண்டானும் அளவளாவுகையில், ''குற்றமின்றிக் குணம் பெருக்கிக் குருக்களுக்கநுகூலராய்'' என்று பெரியாழ்வார் அருளிச் செய்துள்ளமையால் ''நமது ஸேவையால் ஆசார்யனை உகப்பித்து அவ்வுகப்படியாய் அருள் பெற்று நல்வாழ்வு பெற வேண்டும்'' என்று ஆண்டான் கூறினர். ஆழ்வானோ, மதுரகவிகள், ''பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்'' என்றருளியுள்ளதைக்

காட்டி, ''நாமே நம் செல்லாமையைக் கண்டு இரங்கி அருள்புரியும் குருவே நமது உய்வுக்கடி'' என்று காட்டினர். "தேவுமற்றறியேன்'' என்று ஆசார்யனையே தெய்வமாகக் கொண்டு இதில் ஊன்றி நின்ற மதுரகவியாழ்வாரின் சொல்லே நல்வழி காட்டுமது என்று ஆழ்வான் சொன்னதைப் போற்றித் தம் நெஞ்சில் கொண்டார் முதலியாண்டான்.

இங்கு நாமறிந்து நடைமுறை இலக்கணமாகக்கொள்ளவேண்டிய கருத்து இதுவே. எப்போதும் எந்நிலையிலும் ஆசார்யனுக்கநுகூலனாய் அவனுக்குப் பரதந்தரனாய் நடந்து அவனுக்கு உகப்பைத் தரும் காரியங்களையே செய்யவேண்டும்- இது 'பெரியாழ்வார் நல்கும் உபதேசம். ஆனால் நாம் ஏதோ செய்துவிட்டதால் அதடியாக ஆசாரியன் நமக்கு அருள் புரிந்தான் என்று எண்ணுவது மிகத்தவறு. காரேய் கருணை இராமானுசனுடைய சிஷ்யர்கள் இவர்கள். முலைக்கடுப்பாலே தானே பால்பெருகும் தாய்ப்பசு போல சிஷ்யனுக்கு உபதேசித்தல்லது தரியாத அளவுக்குக் கருணையுள்ளம் படைத்த எம்பெருமானர், இவருக்குத் தெய்வமான நம்மாழ்வார் போன்ற ''க்ருபாமாத்ர ப்ரஸன்னர்களான'' ஆசாரியர்களே உய்வுபாயமாக இருக்கமுடியும். இதுவே மதுரகவி காட்டிய உயர்ந்த கருத்து.

''ஆசான் போலே மாணவன்'' என்பதற்கேற்ப முதலியாண்டானிடம் அவர் சிஷ்யர்கள் காட்டிய அன்பும் நன்றியுணர்ச்சியும் ஒரு நிகழ்ச்சியாலே தெரியவருகிறது. **நம்பி திருவழுதி வளநாடு தாஸர்** என்றொரு சிஷ்யர் ஆண்டான் ஸ்ரீபாதத்திலவர். ஒரு சமயம் ஏதோ காரணத்தால் அவர்பேரில் கோபம் கொண்டு, அவரை மிகவும் முனிந்து உதைத்தும் தள்ளிவிட்டார் ஆண்டான். ஆயினும் தாஸர் எங்கும் செல்லாமல் அன்று முழுதும் ஆண்டானுடைய வாயில் திண்ணையிலேயே கிடந்து விட்டார். மறுநாள் ஆண்டான் அமுது செய்யப்புகும் போது கோபமெல்லாம் தணிந்து அன்புடன் தாஸரைப்பற்றி விசாரித்தபோது அவர் வாசலிலே உணவும் கொள்ளாமல் இருப்பதாக அறிந்து, அவரை ''ஏன் இங்கேய கிடந்தாய்?'' என்று வினவ, தாஸரும், ''ஒரு நாள் ஒரு பிடி சோறிட்டவன் அடித்தாலும் அவன் வாசல் விட்டுப் போகிறதில்லை நாய். எனக்குப் போக்கிடம் வேறு இல்லை'' என்று பதிலளித்தாராம், ''நான் விலகினேனாகில் மஹோபககரகனை ஆசாரியன் விஷயத்தில் நன்றி இல்லாதவனாய் நாயினும் தாழ்ந்தவனாக மாட்டேனா?'' என்பது தாஸர் கருத்து. அவரை ஆண்டான் உகந்து பணிகொண்டார் என்று சொல்லத் தேவையில்லை, (தொடரும்)

# நற்குருவின் வண்மை—8

ஸ்ரீமான் K. B தேவராஜன், B Sc

ஆசார்யத்வத்தின் ஏற்றமறிந்த எம்பெருமானும், அதற்குத் தான் இட்டுப் பிறவாதவனாயினும், அதை ஆசைப்பட்டிருப்பான் என்பது சென்றவிதழில் காட்டப்பட்டது. அப்படிப்பட்ட ஆசார்யரின் பெருமையை மேலும் சில விஷயங்களைக் கொண்டு அனுபவிக்கலாம்.

லீலாவிபூதியான இந்த நில உலகமென்ன, நித்யவிபூதியான பரமபதமென்ன, ஆக இவ்விரண்டு விபூதிகளையும், இவற்றைத் தனக்குச் செல்வமாகவுடைய எம்பெருமானையும், தானிட்டது வழக்காகும் படியாகப் பண்ணிக் கொடுத்த ஆசார்யன் நமக்குப் பண்ணியிருக்கும் உபகாரம் ஈடு இணையற்றதாகும். அந்தப் பெறுநல்லுஉதவிக்குக் கைம்மாறாகக் கொடுக்க வேண்டும் என்றால், இரண்டு எம்பெருமான்களும், இரண்டு நித்யவிபூதிகளும் இரண்டு லீலாவிபூதிகளும் வேண்டும். மற்றொரு எம்பெருமானோ, மற்றொரு லீலாவிபூதியோ, மற்றொரு நித்யாவிபூதியோ இருக்கமுடியாது. அதுபோலவே ஆசார்யன் நமக்குச் செய்திருக்கும் உபகாரத்துக்கு ஈடான பிரத்யுபகாரம் ஏதும் செய்யும்படியாக அத்தனை பெரிய பொருள் எங்குமே இல்லை என்பது கருத்து. "**ஆசார்யனுக்கு ஸத்ருச ப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதி சதுஷ்டயமும் ஈச்வரத்வயமும் உண்டாகில்**" என்பது ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி.

ஒருவன் பகவானை அடைய வேண்டுமென்றால், அவனுக்கு ஆசார்யஸம்பந்தம் அவசியம் இருக்கவேண்டும். ஆசார்யனால்தான் பகவல்லாபம் உண்டாகும். ஆனால் அந்த ஆசார்யனை முதலில் அடைய வேண்டுமே! அவனை அடைவிப்பார் யார்? என்கிற கேள்வி யெழுகிறது ஒருவன் நல்லாசிரியனை அடைவதற்கு ஆறு காரணங்கள் கூறப்பட்டுள்ளன, **ஈச்வரஸ்யச ஸௌஹார்தம் யத்ருச்சா ஸுஹ்ருதம் ததா, விஷ்ணோ: கடாக்ஷம் அத்வேஷம் ஆபிமுக்யம்ச ஸாத்விகை:, ஸம்பாஷணம் ஷடேதாநி ஹி ஆசார்யப்ராப்திஹேதவ:** என்கிற ப்ராமண வசநத்தில், 1. எம்பெருமானின் ஸௌஹார்தம் [நன்மைஎண்ணுமியல்பு] 2. சேதநன் பக்கல் உண்டாகும் யாத்ருச்சிக ஸுக்ருதம் [வேறொரு செயலில் ஈடுபட்டிருக்கும்போது

தெரிந்தோ தெரியாமலோ உண்டாகும் நற்செயல்] 3, எம்பெருமானின் கடாக்ஷம் 4: பகவத் பாகவத விஷயத்தில் த்வேஷமற்றிருத்தல் 5. பகவத்பாகவத விஷயத்தில் ஈடுபாட்டுடனிருத்தல் 6. பரமஸாத்விகர்களான பாகவதோத்தமர்களிடம் வார்த்தையாடுதல் என்கிற இவ்வாறும் ஆசார்யனைப் பெறக் காரணங்களாம். இவற்றில் முதலில் கூறப்பட்டுள்ளது, எம்பெருமானின் ஸௌஹார்தமேயாகும். ஆகவே ஆசார்யலாபம் நமக்கு எம்பெருமானாலே. ஆசார்யன் நமக்குத்தருவது உயர்ந்தவனான எம்பெருமானையே. ஆனால் எம்பெருமானே மிகமிக வுயர்ந்தவரான ஆசார்யனைக் கொடுக்கிறான். இதனாலும் ஆசார்யனின் பெருமை விளங்குகிறது.

ஆசார்யனுக்கு ஏற்றம், ஜ்ஞாநம், வைராக்யம், பகவத்பக்தி இவற்றால்தான், நாதமுநிகளின் ப்ரபாவத்தை ஆளவந்தார் அசிந்த்ய அத்புத, அக்லிஷ்ட ஜ்ஞாந வைராக்ய ராசயே......அகாத பகவத் பக்திஸிந்தவே என்றருளிச் செய்தார். விலக்ஷணமானதும், ஆச்சர்யமானதும், பகவானின் அனுக்ரஹத்தால் உண்டானதுமான ஜ்ஞானம், வைராக்யம் இவற்றின் கூட்டம் போன்றவராகவும் ஆழ்ந்த பக்வத்பக்திக்கடல் போன்றிருப்பவருமாகிற நாதமுநிகள்' என்று பொருள். ஆகவே ஒருவனுக்கு ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தாலும் ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் இருந்தால் அதனால் எம்பெருமானை அடைய முடியுமா? என்னில், ''ஆசார்ய ஸம்பந்தம் குலையாதே கிடந்தால் ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் உண்டாக்கிக் கொள்ளலாம்; ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தால் அவையுண்டானாலும் ப்ரயோஜனமில்லை'' என்கிற ஸூத்ரமே இதற்குச் சமாதானம்,

ஆசார்யன், ''இந்த சேதநன் என்னுடையவன் என்து அபிமானிக்கும்படி ஒருவன் இருந்தால், ஆத்மாவுக்கு ஆபரணங்களான ஜ்ஞாந, பக்தி, வைராக்யங்கள் இல்லையானாலும் ஆசாரியனின் அருளால் க்ரமமாக உண்டாக்கிக் கொள்ளலாம், எல்லா மங்களங்களுக்கும் காரணபூதரான ஆசாரியஸம்பந்தத்தை யொருவன் தன் தீய புத்தியாலே அழித்துக் கொண்டுவிடுவானேயானால், அவனுக்கு ஜ்ஞான பக்தி, வைராக்யங்களால் ஒன்றும் பயனில்லை அவன் பகவானை அடைய முடியாது என்பது திண்ணம்.

(தொடரும்)

# விசேஷார்த்த விருத்திகள்

ஸ்ரீமான் S ஸௌம்ய நாராயணன்,
மேலத்திருமாளிகை, திருவெள்ளறை

நம் ஸம்ப்ரதாயத்தில் ஆழ்வாராசார்யர்கள் ஆங்காங்கு அநுக்ரஹித்துள்ள சிலபல அர்த்தவிசேஷங்களை ப்ரக்ருதம் அநுபவத்தில் கொள்ளலாம். ஒவ்வொரு பாராவும் ஒவ்வொரு விஷயம் பற்றியது. தொடர்ச்சியாக இருக்கவேண்டும் என்னும் நியதி கொள்ளப் படவில்லை.

(1) நாலாயிர திவ்யப்ரபந்த அடைவில் ஒரு பதிக்கத்துக்கு விஷயமாக முதலில் அமையப் பெற்ற திவ்ய தேசம் திருவெள்ளறை. 'ஆதி திருவெள்ளறை' என்ற வழக்குக்குச் சேர முதலிடம் பெற்றது போலும். தாம் யசோதையாகி, கண்ணனின் லீலைகளைப் பாசுரமுகத்தால அநுபவிக்கும் பெரியாழ்வார், கண்ணனை நீராட்டிக் குழல்வாரிப் பூச்சூட்டி முடித்தபின் கண்ணெச்சில் படாமைக்காகக் காப்பிட நினைத்து, இந்த திவ்யதேசத்தையே மிகவும் உகந்தருளினராதலால், காப்பிடல் பதிகத்துக்குத் திருவெள்ளறை எம்பிரானையே விஷயமாக்கினார். மன்னுகுறுங்குடியாய்! வெள்ளறையாய்' (பெரியாழ்வார் திருமொழி 1—5—6) என்றவிடத்தில் "(வெள்ளறையாய்) இவர் விசேஷித்து மங்களாசாஸனம் பண்ணும் தேசமிறே திருவெள்ளறை" என்று ஸ்வாபதேசவ்யாக்யானம். திருமங்கையாழ்வாருடைய 'ஒழிவில்காலம்' (நித்ய கைங்கர்யம் பண்ண பாரிக்கும் இடம்) திருவெள்ளறை எம்பெருமான் விஷயமான 'வென்றிமாமழுவேந்தி' (பெரிய திருமொழி 5—3) பதிகமாகும். நம்மாழ்வாரது 'ஒழிவில்காலம்' பதிகம் திருவேங்கடமலையிலாகையாலே அதை நினைந்து தமது பாசுரத்தில் "திருவேங்கடப் பொருப்ப! நின் காதலை அருள் எனக்கு" என்கிறார் போலும் திருமங்கையாழ்வார். நாலாயிர அடைவில் முதற்பதிகம் பெறுமவன் திருவெள்ளறை எம்பெருமான்; கடைசிப் பதிகம் பெறுமவன் திருப்பேர் நகரானாகிய அப்பக்குடத்தான். ஆழ்வார்களில் கடைக்குட்டியான திருமங்கை ஆழ்வார் 'ஒருநல்சுற்றம்' திருமொழியில் துளக்கமில்' (10—1—4) என்ற பாசுரத்தில் இவ்விரு எம்பெருமான்களையும் சேர்த்து அநுபவிக்கிறார்.

(2) எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களைச் சொல்லுவதற்குப் பல திருநாமங்கள் உண்டு. கேசவன், மதுசூதனன் முதலான வீரப்பெயர்கள் பலபல. கோவிந்தன், தாமோதரன் முதலான சீலப்பேர்களும் அநேகம். எம்பெருமானுடைய குணங்களை அநுபவிக்க ஒரு ஸஹஸ்ரநாமம் இருப்பது போலே, 'வெண்ணெய் களவு கண்டான், பெண்களைக் களவுக்கண்டான், மஹா பலியை

வஞ்சித்தான்' முதலான அவனை குணஹீனனுகச் சொல்லும் ஒரு ஸஹஸ்ரநாமம் பண்ணி பெருந் தெருவிலே பிதற்றப்போகிறேன்'' என்கிருர் நாயிகாபாவம் தலையெடுத்து மடலெடுக்கத் துணிந்த திருமங்கையாழ்வார், 'பேசநின்ற எம்பெருமான்' என்று பேர் பெறுவதைக் காட்டிலும் 'ஏச நின்ற எம்பெருமான்' என்று பேர் பெறுவதில் அவனுக்கு அவ்வளவு விருப்பம். மடலெடுக்கத் துணிந்த பரகாலநாயகி (பெண்நிலையில் திருமங்கையாழ்வார்) எம்பெருமான் விஷயமாக ஒரு ஸஹஸ்ரநாமம் பண்ண முற்பட்டாள். பராங்குச நாயகி (நம்மாழவார்) விஷயமாக எம்பெருமானே ஒரு ஸஹஸ்ர நாமம் பண்ணினுன். நம்மாழ்வார் தமது திருமடல் பதிகமான 'மாசறு சோதி'யில் (5—3, பராங்குச நாயாகியே ''நம்மைக் குறித்து எம்பெருமான் ஸஹஸ்ரநாமம் பண்ணினுன்'' என்கிருர். பராங்குசநாயகி எம்பெருமானேடு சேரப் பெருத ஆற்ருமையாலே மடலூர்ந்தாகிலும் பெறப்பார்க்கும் போது தோழியானவள் 'ஊரார் பழிப்பர். மடலெடுப்பது தகாது'' என்கிருள். பராங்குச நாயகி ''முன் செய்ய மாமை இழந்து மேனிமெலிவெய்தி. என் செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே. என் செய்யும் ஊரவர்கவ்வை தோழீ இனி நம்மை'' என்கிருள். '‚செய்யவாய், கருங்கண் என்று தன் அவயவங்களைத் தானே கொண்டாடலாமோ?'' எனில், அப்படியல்ல. எம்பெருமான் பராங்குச நாயகியை வந்து கிட்டினபோது அவனுடைய ஸ்ரீஸஹஸ்ர நாமத்துக்கு இவளுடைய செய்யவாய், கருங்கண் முதலான அவய வங்கள் விஷயமாயின. அதனைத்தான் கேட்டிருந்தவளாகையாலே இப்போது அவனையடையாமல் தான் இழந்த க்ரமம் ஒருபுறம் இருக்க, அவன் உகந்த க்ரமம் நினைவுக்கு வந்தமையாலே செய்ய வாய் கருங்கண் என்று சொல்லுதிருள் பராங்குசநாயகி. முதலை வாய்ப்பட்ட யானையைக் காப்பாற்றி மடுக்கரையில் கொணர்ந்த வாறே ''நால்வாய் மும்மதத்து இரு செவி ஒரு தனி வேழம்'' என்று யானையின் ஒவ்வோரவயவத்திலும் ஈடுபட்டான் எம்பெரு மான் என்ருல், பராங்குசநாயகியின் அவயவ சோபையிலும், ஸமுதாய சோபையிலும் ஈடுபட்டு, அவன் ஓர் ஸஹஸ்ரநாமம் செய்தமை பற்றிச் சொல்லவும் வேணுமோ?

(3) ''திர்யக்குகளும் (பசுபக்ஷி முதலான ஜந்துக்கள்) கிட்டி அடிமை செய்ய ஆசைப்படும்படி திருமலை விளங்காநிற்கிறது'' என்கிருர் திருமழிசை ஆழ்வார் திருவேங்கடத்தில் வாழ்கின்ற தோர் யானை இரவிலே பூர்ணசந்திரனைக் கண்டு வேங்கடவனுக்கு திருவிளக்காகச் சந்திரனை வைக்கவேண்டும் என்று எண்ணி அதனைப் பிடிப்பதற்காகத் துதிக்கையை நீட்டுகிறது. ஆனல் சந்திரனைப்

பிடிக்க முடியவில்லை. சந்திரனை எப்படியாவது பிடித்து வேங்கட வனுக்கு விளக்காக ஸமர்ப்பிக்க வேண்டும் என்னும் ஆசையாலே எப்போதும் துதிக்கையை நீட்டிக் கொண்டே நிற்கிறது. யானை யைப் பிடிப்பதற்கு வந்த வேடர்கள் 'இதுவே தக்க தருணம்' என்று எண்ணி, இந்த யானையை வளைத்துக் கொண்டனர். சந்தி ரனைப் பிடிப்பதில் யானை ஈடுபட்டிருந்தமையால், வேடர்கள் வளைத் துக் கொண்டதை யானை அறியவில்லை. திருமலையில் வாழும் குற வர்கள் அவ்வேடர்களை எதிர்த்துதுரத்திவிட்டனர். ஆகவே வேங் கடவனுக்கு அடிமை செய்யப் பார்த்த யானைக்கு வேடர்களால் ஏற்படவிருந்த அபாயம் நீங்கியது. பகவத்ஸந்நிதியில்லாத தேசத் தில் வாழ்க்கையாலே வேடர்கள் தங்கள் ஜாதிக்கநு குணமாகக் கொடுந்தொழில் புரியமுற்பட்டனர். குறவர்களும் கொடிய ஜாதி யில் பிறந்தவர்களாயினும், திருமலை வாஸத்தாலே தங்கள் கொடு மையைப் பாகவதவிரோதியான வேடர்களிடம் காட்டினர். இதை 'வைப்பன் மணிவிளக்கா' (நான்முகன்திருவந்தாதி 46) என்னும் பாசுரத்தில் காட்டுகிறார் திருமழிசையாழ்வார். இப்படி அறிவில் மிகக்குறைந்த விலங்குகளும், அறிவில் தாழ்ந்த குறவர்களும் பக வத் பாகவதர்களுக்கு அடிமை செய்ய ஆசைப்படும் தலமான திரு வேங்கடமலையை அடைந்து எல்லோரையும் உஜ்ஜீவிக்கச் சொல்லு கிறார் ஆழ்வார்.

(4) அவரவர்களின் நிலைக்கேற்ப தாங்கள் உண்ணும் பண்டங் களை மீன், மாம்ஸம் முதலியவைகளானாலும், எம்பெருமானுக்குக் கண்டருளப் பண்ணியே தாம் உண்ணவேண்டும். ஆசார்யனுக்கோ ஸ்ரீவைஷ்ணவர்களுக்கோ தங்கள் ஜாதிக்கநு குணமான உணவு முதலான எதையும் கொடுக்கக்கூடாது. அவர்கள் விரும்பி ஸ்வீக ரிக்கக் கூடியவைகளையே ஸமர்ப்பிக்க வேண்டும். இதனைத் திரு மங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தி கொண்டு தெளியலாம். பரகால நாயகி சௌரிப்பெருமாளுக்குத்தன்நிலையைச் சொல்லும்படி நாரை யைத் தூதுவிடுகிறாள். அதற்குக் கைம்மாறாக 'பழனமீன் கவர்ந்து உண்ணத் தருவன்' (திருநெடுந்தாண்டகம் 27) என்று அழைக் கிறாள். தூது சென்று தங்களை எம்பெருமானுடன் சேர்த்து வைக் கும் வண்டு நாரை முதலியவைகளை ஆசார்ய ஸ்தானத்தில் வைத் துப் பேசுவர் ஆழ்வார்கள். ஆகவே, தான் அமுது செய்யும் பக்ஷ்ய போஜ்யங்களை அளிக்காமல், ஆசார்யஸ்தானத்தில் அமர்த்திய நாரைக்கு அது விரும்பி உண்ணும் மீன்களை உண்ணத்தருவதாகக் கூறுகின்றாள் பரகாலநாயகி. நமது ஆசார்யர்களுக்கு நாம் அவர் கள் அமுது செய்யத்தக்க பரமஸாத்விகமான உணவு வகைகளையே ஆசாராநுஷ்டானங்களுக்கு ஒத்தபடி ஸமர்ப்பிக்கவேண்டும். ★

# யார் பெரியவன்?

காரியவைகுண்டம் என்பது எம்பெருமானுடைய ஸ்தானங்களில் ஒன்று. பாற்கடல்போல பரமபதத்திற்குப் புறம்பானது. நாரதர், ஸனகாதிகள் போன்ற தேவரிஷிகள் இங்குத்தடையின்றி புகுந்து நாராயணனுடன் அளவளாவி மகிழ்வர். நாரதர் முழு ஸ்வதந்தரத்துடன் பெருமாளுடன் பெரியவர் சிறியவர் என்ற தடை எதுவுமின்றி ஸமமான நிலையில் விநோதமாகப் பேசிப் பறிமாறும் படி சலுகையுடையவராயிருப்பர்.

ஒருசமயம் நாரதருக்கு இப்படி ஒரு எண்ணம் உதித்தது பெருமாளை எ படியாவது பேச்சில் மடக்கி அவரிடம் தப்புக் கண்டுச் சிரிக்கவேண்டும். 'உலகில் மிக்காரில்லாத மிகப்பெரியவன் யார் என்று அவனைக்கேட்க வேண்டும். ஸத்யமூர்த்தியாகையாலும் உண்மையில் அவனே அறப்பெரியவனுகையாலும் ''நானே பெரியவன்'' என்று பதில் சொல்லுவான். ''நீ தற்பெருமை பேசும் தோஷமுடையவனுனாய்,' என்று பரிஹஸித்துச் சிரிப்பேன்'' என்று எண்ணி, பகவானிடம் தான் விரும்பிய வினுவினை உதிர்த்தார். உடனே பகவான் சொன்னுர்:

''இவ்வுலகம் மிகவும் பெரியது. ஆனுல் ஸமுத்ரம் அதைச் சுற்றி வளைப்பதால் அதைவிடப் பெரியது. பானையில் பிறந்தவரான அகஸ்திய முனி ஸமுத்ரம் முழுதையும் உள்ளங்கையில் சேர்த்துப் பருகினமையால் அவரே பெரியவர். அவரோ ஆகாசத்தில் மின்மினி போன்ற சிறு நட்சத்திரமாய் விளங்குகிருர் இதனுல் ஆகாசமே மிகப்பெரியது. அந்த ஆகாசத்தை ஒரு சமயம் நான் ஒரு காலால் அளந்தேன், அந்தக்கால் எத்துணைப் பெரிதாக இருக்க வேண்டும்? அந்தக்காலையுடையதான மேனி எவ்வளவு பெரிதாக இருக்கும்? அந்த விக்ரஹத்தின் இருஅடிகளையும் நீ உன் இதயத்தில் அன்பால் அடக்கியிருக்கிருய். உன்னைவிடப் பெரியவன் இந்த ஜகத்தில் யாரிருக்க முடியும்?''—என்று தானே மிகப்பெரியவன்என்று சொல்லாமல் சொல்லி, நாதரைம் பேச்சற்றவராகச் செய்தார்.

தொடர்ச்சி 17ம் பக்கம் பார்க்கவும்

770

# பட்டரின் வினவும் ஆச்சான் விடையும்

ஸ்ரீமான் R. வேங்கடராமாநுஜன்

''தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்'' என்கிறார் நம்மாழ்வார். இது ஏனைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கும் ஒக்கும். பொன்னும் மணியும் முத்தும் சேர்ந்த ஆபரணம் போன்று அருளிச்செயலும் ஆசார்யர்களின் உரைவளமும் இடையிடையே பிற ஆசார்யர்களின் ஸம்வாதவசனங்களும் சேர்ந்து அடியார்களுக்கு அணிகலன்களாக அமைந்துள்ளன என்னலாம்.

பெரிய திருமொழியில் ,'கள்வன்கொல்'' என்று தொடங்குவது ஒரு திருமொழி. அன்புள்ளங்கொண்ட தலைமகன் அன்புடைய தலைமகளை வாவென்று அழைத்துக்கையைப் பிடித்தவுடன் அவனோடு தலைமகள் சென்று விடுகிறாள். இதனையறிந்த தாயானவள் 'இவர்கள் தலைவனுடைய ஊர்ப்போய்ச் சேருவார்களோ! மாட்டார்களோ! என்று அஞ்சுவதைப் பேசுவதாகும்.

இறைவன், ஒரு ஜீவனைக் கைக்கொள்ள விரும்பினால் அவன்பால் அன்புடன் தானேவந்து அழைத்துச் செல்லுகிறான் என்ற முறை இங்குவிளங்குகின்றது. **அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாங்கதிம்** என்ற வராஹப்பெருமானின் வார்த்தையை இங்கே நினைவிற் கொள்ளலாம்.

முதற்பாட்டில் இவன் கள்வனோ! யான்அறியேன்; கரியான் ஒருகாளை வந்து நுண்ணிய இடையையுடைய என் பெண்ணை வா வென்று கூறி, அவளுடைய வெள்ளிவளையல் அணியப்பெற்ற கைகளைப்பற்றினான்; அவ்வளவில் பெற்ற தாயான என்னையும் விட்டு அகன்று அவனோடு சென்றுவிட்டாள்; இவர்கள் இருவரும் காமத்தால் மயங்கியவர்கள்; அள்ளல் அம்பூங்கழனி அணியாலி புகுவர் கொலோ? என்று தாய் கூறுகிறாள்; கொல் என்பது ஐயத்தை உணர்த்தும். 'லங்காத்வாரத்திலே சென்று நிற்கலாகாதோ'' என்று நில்லாதே உத்தேச்யபூமியிலே பகலே புக்கார்களாகப் பெறுவார்களோ'' என்று தாய் பயப்படுவதாக பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானமிட்டுள்ளார்.

இவ்வண்ணமே "பஞ்சியம் மெல்லடி என்பனைத்தோளி பரக் கழிந்து வஞ்சிஅம்தண்பனை சூழ் வயலாலி புகுவர் கொலோ" என்று தாய் அஞ்சுகிருள். செம்பஞ்சுபோன்று அழகிய மெல்லடிகளை யுடையவளும் மூங்கில் போன்று அழகிய தோள்களையுடையவளு மான என்னுடைய பெண்ணும் அவனும் பழியின்றி, வஞ்சியும் மூங்கிலும் சூழ்ந்துள்ள அழகிய திருவாலியைச் சேருவார்களோ? அல்லது வேறு எங்கேயாவது சென்று துன்பத்தை விளைத்துக் கொள்ளுவார்களோ? என்பது பொருள். இப்படியே பாசுரந்தோறும் தாயினுடைய அச்சம் கூறப்படுகிறது. ஆளவந்தார் கோஷ்டி யில் சிலர் ஒரு கேள்வி எழுப்பினர்: "உண்ணுஞ் சோற்றிற் பிராட் டிக்கோ கள்வன் கொல்லில் பிராட்டிக்கோ அஞ்சவேண்டுவது" என்று. "உண்ணுஞ்சோறு" திருவாய்மொழியில் ஆழ்வாரான தலைமகள் தனியாகப் போகிருள், இருவராய்ப்போனவர்களுக்கு வயிறெறிய வேணுமோ? தனி வழி போனவளுக்கன்றே வயிறெறிய வேண்டுவது" என்று கோஷ்டியிலிருந்தவர்கள் சிலர் வினயளித் த்தார்கள்: "திண்ணமென் இளமான் புகுமூர் திருக்கோளூரே" என்று இங்கு தாய்ப்பாசுரம் உள்ள ரஸத்தைக் கொண்டு ஸ்ரீஆளவந்தார், "அங்ஙனன்று காணுங்கோள்' இருவராய்ப் போனவர்களாகையாலே இருவர்க்கும் அஞ்சவேணும்; இருவரும் இருவர்க்கும் ஊமத்தங்காய் (அதாவது மயக்கத்தைத் தருபவர்கள்) கடித்ததும் ஊர்ந்ததும் அறியார்கள்; அள்ளல்அம் பூங்கழனி அணியாலிபுகுவர் கொலோ! அன்றியே லங்காத்வாரத் திலேபுகுவர்கொலோ! என்றிறே அங்குவயிறுபிடி" என்று அருளிச் செய்தாராம். இவ்விஷயம் "உண்ணுஞ்சோறு" திருவாய் மொழி அவதாரிகையில் காணப்படுகிறது எனவே பெருமாளும் பிராட்டியுமாகக்கருதி தாய் அஞ்சுகிருள் என்பது நன்கு விளங்கு கிறது. "பஞ்செனச்சிவக்கும் பாதாள்" என்று மகாகவி கம்ப நாடரும் பிராட்டியை இவ்வாறு கூறியுள்ளதைக் காணலாம். முன்னிரண்டடிகளில் "அஞ்சுவன் வெஞ்சொல் நங்காய்! அரக்கர் குலப்பாவை தன்னை வெஞ்சின மூக்கரிந்த விறலோன் திறம் கேட்கில் மெய்யே" என்று கூறியுள்ளாள். "அரக்கர் குலப்பாவை—சூர்பணகை அவளுடைய மூக்கை வெஞ்சினத்தால் அரிந்த வீரனுடைய தன்மை யைக் கேட்கின் அது வெஞ்சொல்; அதை நினைத்து உண்மையாகவே அஞ்சுவன் என்பது பொருளாகும். இங்கே பட்டருக்கு ஐயம் உண்டாயிற்று; "ஒரு ஸ்த்ரீயை விரூபையாக்கினவனுடைய திறம் கேட்கில் அஞ்சுவன் என்கையாலே இத்தலைக்கு குணஹாநியாய் தோற்றுநின்றது: இது ஆழ்வார் அருளிச் செய்யக்கூடாது: இது எங்ஙனே சேரும் படி" என்று கிடாம்பியாசாச்சானைக் கேட்கலா யினர். இதன் கருத்து யாதெனின்:— ஆழ்வார் தலைமகளாக,

பெருமாளிடமிருந்து பிரிவாற்ருமை மிக்குள்ள போது சூர்பணகை யின் மூக்கறுத்த செயலைக் குற்றமாக அருளி பெருமாளை ஏசுகிருர் பெரிய திரு மடலில்; ''தென்னிலங்கை யாட்டி அரக்கர் குலப் பாவை மன்னன் இராவணன்றன் நல் தங்கை வாளெயிற்றுத் துன்னு சுடு சினத்துச் சூர்பணகா சோர்வெய்தி பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால் தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரிந்து மன்னிய திண்ணெனவும்'' என்று அருளியிருத்தலைக் காண லாம். இந்தக் குற்றத்தை இவ்விடத்தில் தாய் கூறுகின்ருள் என்ருல் அவனுடைய அன்புக் குணத்தைக் கூறுகின்ற இவ்விடத் திற்குப் பொருந்தாது: ஆதலால் இதன் கருத்து என்ன? என்பது பட்டரின் கேள்வி. (மன்னிய திண்ணென—செய்ததில் வருத்தமின்றி நிலைத்திருத்தல் என்பதகம்)

இதற்கு ஆச்சான் அருளிய விடையாவது: ''துடுப்பிருக்கக்கை வேகவேணுமோ! எம்பெருமானுர் தாமே அருளிச் செய்து வைத் தாரிறே' என்ருர் ஆச்சான்''; எங்ஙனே அருளிச் செய்த படி என்று கேட்டார் பட்டர்: ''முன்பொரு புணர்ந்து உடன் போக்கிலே பிறந்த ப்ரமாதத்தைக் கேட்டு அத்தை நினைத்து இப்பொழுது பயப் படுகிருள்'' என்று அருளிச் செய்தார் என்ருர்; சூர்பணகையின் மூக்கையறுத்து அதன் காரணமாக வந்த பிரிவுத்துன்பத்தை நினைத்து இப்போது அஞ்சுகிருள் தாய் என்பது இங்கு உடையவர் அருளிய வார்த்தையால் புலப்படுதல் காணலாம். முன்பு நடந்த செயலை நினைத்துப் பின்பு அஞ்சுவது ஆழ்வார்களின் இயல்பு. ''அதீத காலங்களில் அபதானங்களுக்கு உத்தர காலத்தில் வயிறெ ரிவது'' என்று ஸ்ரீவசனபூஷணத்தில் அருளி யிருத்தலை இங்கே நினைத்துக் கொள்ளலாம். ஆழ்வார்களின் திவ்விய ஸூக்திகளுக்கு நயம்படப் பொருளுரைக் கின்றவர் பட்டர். ஸகல சாஸ்த்ரவித் தமர் என்னும் பிரசித்தி பெற்றவர். இவர்க்கும் ஓர் ஐயம் ஏற்படு மாளுல் அதனை அகற்ற வல்லவர் எம்பெருமானுர் தவிர வேறுயாரு ளர்? அதனுல் பட்டர் கிடாம்பியாச்சானைக் கேட்டார். அவர் எம்பெருமானுருக்குத் தளிகை செய்து ஸமர்ப்பிக்கின்றவராவர். அச்சிறப்பு தோன்ற ''துடுப்பிருக்கக்கை வேகவேணுமோ'' என்று அருளியிருப்பது காணலாம். எம்பெருமானுர் அருளிச் சைய்த வார்த்தையிருக்கும் பொழுது நாம் வருந்த வேணுமோ என்பது கருத்து.

இங்கே சிந்திக்க வேண்டுவது ஒன்றுண்டு. 'ஒரு பெண்ணை அன்பும் இரக்கமுமின்றி அவளுடைய மூக்கையறுத்து வதைத்தான் என்ருல் அது கொடுஞ் செயலாகும். அதனை நினைத்து அஞ்சுகின்

றேன் என்றால் கூடுமோ என்பது பட்டரின் சங்கை. இவ்விடத்தில் அரும்பதவுரையாசிரியர் தன்னை ஆசைப் பட்டு வந்த ஸ்த்ரீயை மூக்கரிந்தாப் போலே இவளையும் செய்து விடுகிறானோ வென்று தாய் அஞ்சுகிறாள் என்றால் கீழ்ச் சொன்ன ப்ரணயித்வத்துக்கு குண ஹாநி வாராதோ. இது பிரகணத்தோடு சேரும் யடி என்!'' என்று பட்டருக் குண்டான சங்கையாகக் காட்டியிருக்கிறார். இதையொட்டி எல்லாரும் இவ்வாறாகவே கூறி வருகிறார்கள். இப்படிக் கூறுவது பொருந்துமா? என்று சிந்தித்தல் வேண்டும்: சூர்ப்பணகையான வள் பிராட்டியை அகற்றி விட்டுப் பெருமானை மணக்க விரும்பினாள்; அதனால் அவளுடைய மூக்கையறுத்தார் பெருமாள்; இவள் பிராட் டியாக இருக்க, இவளையும் அவ்வாறு செய்துவிடுவானோ வென்று தாய் அஞ்சுகிறாள் எனறு பட்டர் எண்ணினார் என்பது கூடு மோ? என்ற ஐயம் சிறியேனுடைய சிந்தனையில் எழுகின்றது; அதனை இங்கே தெரிவித்துக்கொண்டேன்.

---

13ம் பக்க தொடர்ச்சி

நாரதருக்கு மிகவும் வெட்கமாய் விட்டது. உடம்பு ஒரு சாணாய்க் குறுகி விட்டது. ஆனால் எம்பெருமானிடம் தோற்பதிலும் ஒரு பெருமையுண்டே. அதனால் மிக மகிழ்ந்தார்.

பெருமாள் சொன்னதை ஒரு ஸுபாஷித ச்லோகமாக அநுபவிக்கலாம்.

ப்ருத்வீதாவத் இயம் அதீவ விஸ்த்ருதிமதீ தத்வேஷ்டநே வாரிதி:
பீதோ ஸௌ கலசோத்பவேந முநிநா ஸ வயோம்நி காதோத்யவத் |
வ்யாப்தம் தத் தநுஜாதிபஸ்ய ஜியா: பாதேநாஸைஸோ போ
தாத்ஸே தத் பாதயுகலம் ஹ்ருதி ஸதா கோऽந்யோ மஹாந்? ||

நன்றி ராமாநுஜவாணி-ஏப்ரல் 1981

# பன்னிரு திருநாம மாலை

ஸ்ரீமான் K. S ஸ்ரீநிவாசன், கல்கத்தா

1 நாசமான பாசம் நெடுக வளர்த்தேயிக்
காசினிமேல் நங்கள் நவியுதுமே!—கூசினராய்
பேசும்! விரைகமழ் கோதை கொழுநன்! மால்
**கேசவன்**! வாசகங்கள் வாய்த்து!

2 வாய்த்த சராசர மத்தனைக்கும் மால்நீயே
வாய்ந்த சரண்னெ நின்சரணே - சாய்க்கும்
உலகு முயிரும் உடலெனக் கொள்வான்
இலங்குதோள் **நாரணனம்** மான்!

3 மான்மலி கானமூடு புக்கு புலங்கடித்து
ஏன் மெலிய வேண்டுநீர்? வேட்டுமேல்—தான் பொலிந்து
தங்கண் தவக்கோலங் காட்டித் தழையுமே
அங்கண் அருள்**மா தவன்**!

4 தவவேள்வி யாவும்தா மேயென் னுணரர்த்த
அவன்படைத்தா னின்னடிசில் மால்நீ – உவத்தி!
சினம்கொண்ட விந்திரனார் சீற்றம் சிதைந்தே
உனைக்கொள்ளும் "**கோவிந்த**"! என்று.

5 என்று மெதிலும் இருப்பான் படர்ந்தான் மால்!
ஒன்று மிலமே அவன்விட்டு என்றுனல்
இன்றே பணிமின் இலைசெய்தான் வீயவண்தூண்
நின்றஅவ் விட்டுவைக் கற்று!

6 கற்கவே பாட மெவனுக்கும்? கற்பதெவன்?
சொற்கும் பொருட்கும் சொலப்படலாய் – நிற்குமெவன்?
தேடும்! எதுசா தனமென் தெளியும்! பின்
கூடும்! **மதுசூதன்** தாட்கு!

7 தாட்கொடு தம்பிரான் தாவி உலகளந்தான்!
தாட்கொள அஞ்சினர் தம்சிந்தை — மீட்கொள
விஞ்சியே! இல்லசெய் துய்யலாவ தில்லகண்டீர்!
அஞ்சலில் நும் அவர் மாட்டு!

8 அவர்மாட் டகமழியும்! அம்மா லடியார்
அவர்மாட் டகங்குழையும்! குன்னும்! — எவர் கோடும்
இம்மா விதிமுறையே? மூன்நீர் அதனுதித்தாள்
அம்மா! அவளுக்கு மால்!

9 மால்செய்வார் மாலாவார்! அன்றொருநாள் மாவலிபால்
மால்செய்தார் மேலாவார்! வாமனனாய் — மால்செய்த
மால்ஈசன்! நம்மேல் வினைகடிவான்! பேசலுமே
மால்பேசும்! பற்றும்! பணிந்து!

10 பணிவித்துத் தம்மிசைவே நாளும் பயிற்றும்
பிணியொத்த ஐம்புலத்தே மண்டி — துணிவற்றீர்!
பற்றும் இனியுமே! எம் இரு டீகேசன்
குற்றே! கனியுமவண் காப்பு!

11 காப்பெவற்கு? காண்கு முலகம் கடுதியிற்
பூப்பற்கு! பூதலத்தே ஆச்சிபால் — ஆப்புகொள
அந்தோ அணித்தனுகும்? அங்கமல உந்தியோய்!
எந்தாய்! பணிகொள் அடிக்கு!

12 அடியார் களாங்கே அடிமைசெய் தாயன்
உடனிருக்க அந்தமிற் காத — லடியனேன்
பற்றுவன்! பாடுவன்! தாமோ திரவுன்தாள்
கற்றயான்! கூவுமாலென் நா!

# அத்யயன உத்ஸவமும் அருளிச்செயல்களும்-2

(6-ம் இதழ் தொடர்ச்சி)

திவ்யப்ரபந்தகளுக்கு ''அநத்யயன காலம்'' என்று வரையறுக்கப்பட்ட காலத்தில் நித்யப்படி ஓதும் பாசுரங்களை ஓதுவதில்லை. திருக்கார்த்திகையன்று பெருமாள் நம்மாழ்வாருக்குப் பட்டோலை சாஸனம் விடுப்பதை அன்று கோஷ்டியில் ஸேவிப்பார்கள் (படிப்பார்கள்).

''மார்கழி மாதம் சுக்லபக்ஷம் ப்ரதமையில் முத்துடைத்தாமம் நிறைதாழ்ந்த பந்தல் கீழ் நம் திருமாமணிமண்டபத்தில் கோப்புடைய சீரியசிங்காதனத்தின் மேல் நாமும் நம் நாச்சிமார்களும் வீற்றிருந்து உம்முடைய பாட்டுக்களும் கலியன் உள்ளிட்டார் பாட்டுக்களும் கேட்கத் திருவுள்ளமானோம். அன்றளவும் (இப்பாட்டுக்களை) நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழியாமல் (லும்) இருக்கும்படிக்கு 'பெருமானரையில் பீதக வண்ணவாடை கொண்டு என்னை வாட்டம்தணிய வீசீரே' என்கிறபடியே உடுத்துக்களைந்த பீதகவாடையும் சூடிக்களைந்த துளபமும் சாத்திக்களைந்த மாலையும் மிடற்றுக்கு எண்ணெயும் நம் தழையிடுவான் கையில் வரக்காட்டினோம்; ஸ்வீகரிக்கவும்'' என்று பெருமாளுடைய சாஸனம். சாஸனப்படி ஆழ்வாருக்குச் சிறப்புகள் நடத்தி பெருமாள் ஸாதித்த எண்ணெயை அத்யாபகர்கள் மிடற்றுக்கும் (கழுத்தில்) தடவிக்கொள்ளும்படி விநியோகம் ஆகும். அன்றிலிருந்து அத்யயன உத்ஸவம் ஆரம்பிக்கும் சுக்லப்ரதமை வரை நாலாயிரப்பாசுரங்களை பாடக்கூடாது என்று பெருமாளின் திவ்யாஜ்ஞை.

நித்யப்படிக்கு தமிழ்ப்பாசுரம் பாடாமல் திருவாரதனம் பூர்த்தியாகாது. இது ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை. மணவாளமாமுனிகள் காலத்திலிருந்து அநத்யயன காலத்தில் அவருடைய ஸ்ரீஸூக்திகளான உபதேசரத்தினமாலையையும் திருவாய்மொழி நூற்றந்தாதியையும் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஸேவிக்கின்றனர். ''தேசிகப்ரபந்தம்'' எனப்படும் பாசுரங்களை ஸேவிப்பது வடகலை

ஆசாரம். இவை வேதாந்த தேசிகர் அருளிச்செய்தவை. திவ்ய ப்ரபந்தங்களில் உள்ள தனிப்பாட்டுகளான (ஆசாரியர்கள் ஸாதித்துள்ள) தனியன்களை ஸேவிப்பதும் ஆசாரமாகவுள்ளது. வைஷ்ணவக் கோவில்களில் அத்யயன உத்ஸவம் மிகவும் முக்கியமானது. அழகான, சாந்தமும் தெய்வீகமும் கமழும் உத்ஸவம். பிரம்மோத்ஸவத்தைப் போல் எம்பெருமானுக்கும் கைங்கர்யபரர்களுக்கும் சோர்வு தரும் உத்ஸவமல்ல. ஆழ்வார்கள் தங்கள் அநுபவத்தை ஈரச்சொற்களால் வடித்துள்ள 4000 பாசுரங்களையும் நிதானமாகப் பாடுவதே இத்திருவிழாவின் முக்கியமான குறிக்கோள். திருவரங்கத்தில் இந்த உத்ஸவத்தை **பெரிய திருநாள்** என்றழைப்பதிலிருந்து இதன் முக்கியத்வத்தை ஒருவாறு உணரலாம். இத்திருவிழா முதன் முதலில் **கோவில்** என்ற தனிப்பெயர் படைத்த திருவரங்கத்தில் தான் துவங்கப் பெற்று நடந்து வந்தது. ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை (அர்ச்சைத்திருமேனி) ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளப்பண்ணி இத்திருவிழாவைத் திருமங்கையாழ்வார் நடத்தி வைத்ததாக பெரியோர் பணிப்பர். வெகு காலம் திருவாய்மொழி ஸேவிப்பது மட்டுமே நடந்து வந்ததாகவும் பின்னர் மற்றய திவ்யப் பிரபந்தங்களையும் சேர்த்து ஸேவிக்கும் ப்ரகாரம் ஏற்பட்டதாக அறியலாகிறது.

பின்னர் ஆழ்வாரை எழுந்தருளப் பண்ணுவது பலகாரணங்களால் ஸௌகர்யப் படாமல் நின்று விட்டது. ஸ்ரீரங்கத்திலேயே ஆழ்வாருக்கு அர்ச்சைத் திருமேனி எழுந்தருளப் பண்ணப்பட்டு நமது பூர்வாசாரியர்கள் காலத்திலிருந்து தற்சமயம் நடக்கும் முறையில் (பகல் பத்து, ராபத்து என்திற கிரமத்தில்) ராமாநுஜாரிய திவ்யாக்ஞையால் நடந்து வருகிறது. ஆக, இந்தத் திருவிழாவிற்கு ப்ரவர்த்தகர்கள் திருமங்கையாழ்வாரும் உடையவரும். இதற்குத் தலைவர் ப்ரபன்ன குலபதியான குருகூர்ச் சடகோபன் (பராங்குசன்-நம்மாழ்வார்).

இத்திருவிழாவில் எம்பெருமானுடன் ஆழ்வாராசாரியகளும் ஓலக்கமாக எழுந்தருளப்பண்ணப்பட்டிருப்பர். பெருமாளருகில் தலைவராக நம்மாழ்வார். அடுத்து கலியன், அவரையடுத்து இராமனுசன். (பராங்குச பாகாலயதிவரர்கள்) இவர்களையடுத்து அவரவர் தோன்றிய கால அடைவின் வரிசைப்படி மற்றய ஆழ்வார்களும் ஆசாரியர்களும், பெரும்பாலான இடங்களில் (திருவரங்கம் உட்பட) ஆண்டாள் இந்த உத்ஸவத்திற்கு எழுந்தருளுவதில்லை. இவர்களுக்கு பரிவட்டம் ஸ்ரீசடகோபன் முதலான சிறப்புகள் ஸாதித்தானதும் அத்யாபகர்களுக்கும் ஸ்ரீசடகோபன் ப்ரஸாதித்து

அர்ச்சகர் ''அருள்பாடு நம்மிராமானுசனடியார்'' என்றழைக்க, அத்யாபகரில் தலைவர் ''நாயந்தே! நாயந்தே! ஸாதித்தருள ஸ்ரீசைலேசதயாபாத்ரம்'' என்று தொடங்குகிறார். முதலில் எம்பெருமானுக்கு மங்களாசாஸனமான திருப்பல்லாண்டும், பிறகு தினம் 200 பாசுரம் (ஏறத்தாழ) என்ற அடைவில் முதலாயிரமும் பெரிய திருமொழியும் ப்ரதமை முதல் தசமி வரை 10 நாட்களில் ஸேவித்து முடிக்கப்பெறும். இந்த 10 நாள் ஸேவை பகலில் நடக்கும். கோவில் உள்ப்ராகாரத்தில் (மஹாமண்டபத்தில்) நடப்பது இந்த உத்ஸவம்.

அன்றைக்கு ஸேவிக்கப்படும் பாசுரங்களின் முக்யமான பாவத்திற்கு (மநோநிலை) ஏற்ப பெருமாளுக்குத் திருக்கோலங்கள் (வேஷம்) அமைப்பது பலதலங்களில் காணலாம். உதாரணமாக பாலகிருஷ்ணனின் சேஷ்டிதங்களை நினைவூட்டும் காளியமர்த்தநம், ஏணி ஏறி வெண்ணை களவு முதலியவை பெரியாழ்வார் திருமொழி காலத்தில் பொருத்தம். பெருமாள் திருமொழி காலத்தில் பட்டாபிராமன் திருக்கோலம் பொருத்தமானது. திருநெடுந்தாண்டகம் ஸேவிப்பது கடைசி தினத்தன்று அன்று பெருமாளே நாச்சியார் வேடம் பூண்டு அமர்ந்திருப்பதை ஸேவிக்கலாம். திருவரங்கத்திலும் தசமி அன்று நாச்சியார் திருக்கோலம் (மோஹினி அலங்காரம் என்பது பாமரவழக்கில்) உண்டு. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் காட்சியாயிருக்கும் அரங்கனை நாச்சியார் திருக்கோலத்தில் ஸேவித்த ஸ்ரீபாசரப்பட்டர், ''திருக்கோலம் அழகாகத்தான் அமைந்துள்ளது: நாச்சியாருடைய (பெரிய பிராட்டியாருடைய) அருள் நோக்கைக் காணவில்லையே'' என்றாராக ஐதிஹ்யம்.

ஸ்ரீரங்கத்தில் காலை திருவராதனம் கண்டருளி உள்சுற்றில் கிளிமண்டபத்துடன் இணைந்த பகல்பத்து மண்டபத்திற்கெழுந்தருளி இத்திருவிழாகண்டருளுகிறான் திருவரங்கச் செல்வன். அரையர்கள் தாள இசையுடன் பாசுரங்களைப்பாடுவர். அந்தந்த தினம் ஸேவிக்கப்படும் ப்ரபந்தத்தையருளிச்செய்த ஆழ்வாரிடம் அநுமதி கோருகிறபடி அவரெதிரே தாளங்களை முதலில் இசைத்து ஆரம்பிப்பது வழக்கம். திருப்பாவைக்கும் நாச்சியார் திருமொழிக்கும் அநுமதி பெருவது கோவிலரண்ணரான எம்பெருமானாரிடத்தில். சிலபாசுரங்களுக்குத் ''தம்பிரான்படி'' என்ற வ்யாக்யானத்தை அரையர்கள் ஸேவிப்பர். சிலபாசுரங்களுக்கு அபினயம் காட்டுவது (நாட்டியமுறைப்படி) உண்டு, சிலபாசுரங்

களில் சொல்லப்படும் எம்பெருமானின் கதையை நாடகமாக நடித்துக் காட்டுவதும் உண்டு. இவர்களுக்கு விசேஷ சிறப்புகளும் மரியாதைகளும் நடக்கின்றன.

பகல்பத்து உத்ஸவம் தசமியுடன் முடிந்துவிடும். ஏகாதசி அன்று சிற்றம் சிறுகாலையில் ''வைகுண்ட வாசல், பரமபதவாசல்'', ''திருவாசல்'' என்று பலபடியாக அழைக்கப் படும் தனி வாயிற் படி வழியாக பெருமாள் வெளிப் பிராகாரத்திற்கு எழுந்தருள, வெளியில் நம்மாழ்வார் பெருமான் வருகைக்காகக் காத்திருப்பர். அவருக்குச் சிறப்புகள் வழங்கியான பின் வடமொழி வேதமும் திருவாய் மொழியும் அங்கு தொடங்கப்படும். ஏகாதசி முதல் 1( தினங்களில் இரவில் தினம் ஒரு பத்தாக (பத்துதிருவாய் மொழிப் பதிகங்கள்—110 பாசுரங்கள்— ஒரு பத்தாகும்) திருவாய் மொழி ஸேவிக்கந்படும், இந்த பத்து நாட்களில் பகலில் வடமொழி வேதம் பாராயணமாகும். இரவில் திருவாய் மொழி. திருவரங்கத் தில் இத்திருநாள் பிற்பகலிலேயே ஆரம்பமாகி வெளித் திருமுற்றத் திலமைந்த 'ஆயிரம் கால்' மண்டபத்தில் நடைபெறுகிறது.

ராபத்திலும் பெருமாளுக்கு சில ஊர்களில் திருக்கோலங்கள் உண்டு உதாரணமாக திருவேங்கடப்பதிகம் ப்ராப்தமாகும் 6-வது திருநாளன்று திருமலையப்பனைப் போல ஸ்ரீ பார்த்தஸாரதியை அலங்கரிப்பதை திருவல்லிக்கேணியில் ஸேவிக்கலாம். திருவரங்கத்து பதிகம் 7-வது திருநாளன்று. இப்பதிகம் ஆழ்வார் நாயகியா யிருந்து படும் அவஸ்தையை தாய் பேசுவதாக அமைந்தது அன் றைய தினம் அழ்வார் பராங்குச நாயகியாக அலங்கரிக்கப்படுகிறார் கடைசி இரண்டு பதிகங்களில் அநுபவத்திற்கேற்ப (அர்ச்சிராதிக தியில் எம்பெருமானிடம் சென்று அவன் திருவடி சேருவதைப் பேசு தல்) ''திருவடி தொழல்'' என்றொரு நிகழ்ச்சி, திருவாய் மொழி யில் ஆழ்வாருடைய மனோ நிலைகளை (moods) சுருக்கமாக அநுபவித்து இந்த உத்ஸவக்ரமத்தையும் மேலே விவரிப்போம்.

இராபத்து முடிந்ததும் இயற்பா ஆயிரமும் ஒரேநாளில் அநுஸந் தானமாகி இத்திருவிழா இனிதே முடிவடையும்.

(தொடரும்)

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கைங்கர்யமே வடிவெடுத்த ஸ்வாமிகள்

## ஸ்ரீ உ-வே. விட்டலபுரம் வேங்கடாசாரியார் ஸ்வாமி

திருவரங்கம் பெரிய கோயிலில் தெப்பஉத்ஸவம். தெப்பம் (திருப்பள்ளியோடம்) கண்டருளின மறுநாள் சாற்றுமறை பந்தக் காட்சி என்று அழைக்கப்படும். ஒரு சமயம் இவ்வுத்ஸவத்தில் இரவு ஒரு மணிக்கு தெப்பமண்டபத்திலிருந்து அடியேன் மேல அடைய வளைந்தான் வீதிக்கு வந்தேன். அங்கேதான் இயல் தொடக்கமாகும்.

அந்த நடு இரவில் சரியான சமயத்தில் ஸ்ரீ உ. வே முதலியாண்டான் பெரிய ஸ்வாமி அங்கு எழுந்தருளியிருந்தார். அடியேன் ஸ்வாமியை ஸேவித்துவிட்டு 'என்னஇப்படி? கூட ஒருவரும் திருமாளிகையிலிருந்து வரவில்லையே' என்றதற்கு, 'தனிமை ரஸ முடைத்து' என்று அருளிவிட்டு, 'அவர் வீதியொரு நாளென்று' என்று ஆழ்வார் அருளிச் செயலை ஸாதித்தார் ஸ்வாமி. ஆஹா! என்று சொல்லி கண்ணீர் சொரிய மீண்டும் ஸேவித்து எழுந்து நின்றேன் அடியேன்.

''ஸர்வேச்வரனுடைய பரத்வத்தை முதல் திருவாய்மொழியில் அநுபவித்தார் ஆழ்வார். பஜநீயதையையும் அருளி, அவனுடைய ஸௌலப்யத்தை 'நன்றெனநலஞ் செய்வது அவனிடை நம்முடை நாளே' என்றருளிச் செய்து, பக்ஷிகளைத் தூது விடுமுகமாக எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்கிறார், ''அருளாழிப்புட் கடவீர் அவர்வீதி யொரு நாளென்று அருளாழி யம்மானைக் கண்டக்கால் இது சொல்லியருள்'' என்று (திருவாய்—1—4—6)

அழகிய மணவாளன் அந்த வீதிவழியாக எழுந்தருளுவது அன்று அந்த ஒரு ராத்திரியில் மட்டுமே. மிக மிகப் பொருத்தமாகவும் சந்தர்ப்பத்திற்குரியபடியும், அதற்கும் மேலே ஸ்வாமி திருவுள்

ளத்தில் எப்பவும் அருளிச் செயலே ஓடிக் கொண்டிருப்பதை நிரூபிப்பதாகவும் அவர் ஸாதித்த சொல் அமைந்ததை உணர்ந்து அடியேன் மெய்சிலிர்த்துப் போனேன்.

ஸ்ரீ ஸ்வாமி சகோதரர்களை அடியேன் நாற்பது வருஷங்களாக ஸேவித்து வருபவன். எப்படி யெனில், திருவரங்கம் பெரிய கோயிலில் நான்கு உத்ஸவங்களில் இயல் கோஷ்டி கைங்கர்யம் உண்டு தை, பங்குனி, சித்திரை பிரம்மோத்ஸவங்கள். மாசியில் தெப்ப உத்ஸவம்; இந்த நான்கிலும் வாகவ ஸேவை. திருவீதி எழுந்தருளி வாகன மண்டபத்துக்கு 6 மணிக்குள் சேர்ந்தாகி விடும். அங்கிருந்து பல்லக்கில் உபயமண்டபத்துக்கு 10 மணிக்குத்தான் எழுந்தருளுவர். இந்த இடை வெளி நான்குமணி நேரம்; ஆக ஆறு மணி நேரமும் முதலியாண்டான் ஸ்வாமி சகோதரர்கள் இயல் ஸேவித்துக் கொண்டிருப்பர்கள். மற்ற அத்யாபகர்கள் செல்வதும் வருவதுமாக இருந்தாலும் இவர்கள் இருவர் மட்டும் நின்று கொண்டே இயல் ஸேவித்துக் கொண்டிருப்பர்கள். மாலைப்புறப் பாட்டிலும் இரண்டரை மணி நேரமும் இப்படியே. ஆக, நாளொன்றுக்கு எட்டரை மணிநேரம் நம்பெருமாள் முன்பு முதலியாண்டான் ஸ்வாமிகளுடைய இயல் அநுபவம் அடியேனுக்குக்கிடைப்பதுண்டு. ஆச்சரியம் ஒரு பக்கம். ஸ்வாமிகளிடத்தில் பக்தியும் ஈடுபாடும் அடியேனுக்குள்ளதை வார்த்தைகளால் விவரிக்க வொண்ணாது.

"இருவராய் வந்தார் என்முன்னே நின்றார்......அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே'' என்று ஆழ்வார் ஸாதித்த கணக்கில் அடியேன் ஒதுங்கியே நிற்பது வழக்கம்.

1960 என்று ஞாபகம். மார்கழிமாதம் அத்யயன உத்ஸவத்தில் ஆழ்வார்கள் மரியாதை பெற்று புறப்பட்டருளி நம்மாழ்வார் சன்னிதியிலிருந்து உடையவர் ஸந்நிதி வரை ஸ்தோத்ரபாட கோஷ்டி. அதிலும் ஸ்வாமி தவறாமல் எழுந்தருளி அன்வயிப்பார். ஒருநாள் சாற்று மறையில் 'ஸ்ரீமன் ஸ்ரீரங்க ச்ரிய' ஸேவித்துக் கொண்டிருந்த போது ஸ்வாமி கேட்டருளி அடியேனைத் திருத்திப் பணி கொண்டார். ''ஸ்ரீமன் ஸ்ரீரங்க யச்ரிம் அநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய — ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவா ...... என்று ஸேவிக்க வேணும். ஸ்ரீமந்ந ஸ்ரீரங்க ..... என்று பலர் ஸேவிக்கிறார்க்ள். இது தப்பு'' என்று 'ந' சப்தம் உச்சரித்து ஸேவித்ததை திருத்தியருளினர். ஸ்தோத்ரபாட கோஷ்டியில் ஸ்வாமியின் குரலும், இசை

யும், சப்த ஸ்பஷ்டமும் ஆச்சரியமானது அநுபவிக்க பரமானந்தமாயிருக்கும்.

இசையில் சின்னஸ்வாமிக்கு (வர்த்தமான ஸ்வாமிக்கு) அபார ஞானம். திருவிருத்தத்தில் 'இமையோர் தலைவா' என்ற இடத்தில் மேல் ஸ்தாயியில் ''கார்வை'' கொடுத்து ஸேவிக்குமழகு அற்புதம். சாரீரமும் எம்பெருமான் அபாரமாக அருளியிருக்கிறான் இந்த ஸ்வாமிக்கு. இதுமட்டுமன்று; திரு ஊறல் உத்ஸவத்தில் எல்லோருடனும் தானும் நின்று 'ஸ்ரீபாதம் தாங்கும்' வலிமையும் அந்த எளிமையும் அத்விதீயமானது. அம்மா மண்டபத்திலிருந்து காவேரிக்குள் இடுப்பளவு ப்ரவாகத்தில் அழகிய மணவாளன் கஜேந்திர மோக்ஷத்திற்காக எழுந்தருளுவர். அந்த சமயம் ஸ்வாமி ஸ்ரீபாதம் தாங்குவதைக் காணப் புல்லரிக்கும்.

ஸர்வம் குணாய குணினா மிதி ஸத்ய மேதத்
யத் கவ்விஹேதரஜநே மலிநத்வஹேது: |
யத் கோபவேஷ விஸிஷேவண முத்தமம் தே
கோபாலநம் ச கணயந்தி குணம் குணேஷு ||

(சாமாந்ய ஜனங்களிடத்தில் காண்கிற அல்பமான காரியங்கள் எல்லாம் குணசாலிகள் விஷயத்தில் பெருமையாகின்றன. இது சத்யம், ஏனெனில் கிருஷ்ணாவதாரத் தொழில்கள் ச்லாக்யமானவையன்றோ—அதிமாநுஷஸ்தவம்-43)

ஸாமான்யமாக வீதிப்புறப்பாடுகளில் ஸ்ரீபாதம் தாங்குதல் சம்பளம் வாங்கிய சேவகமாக அமைந்துள்ளதால் பலர் அதன் பெருமையறியாமல் அல்பமாக எண்ணுவதுண்டு. பெரியோர்கள் இதைக் கைங்கர்யமாகப் பரிந்துச் செய்யும் போது தான் இதன் பெருமை விளங்குகிறது. க்ருஷ்ணாவதாரசரித்ரங்களான மாடு மேய்த்தல் முதலியவை ஸாமான்யர் கண்ணில் குறைவாகத் தோற்றுமவை. ''கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப் பெற்றான் காடு வாழ் சாதியுமாகப் பெற்றான்'' என்று போற்றுகிறாள் ஆண்டாள். இதுவே மிகப் பெருமை பெற்ற தொழில் என்றபடி.

எம்பெருமானார் திருநக்ஷத்திரத்திற்கு மறுநாளே முதலியாண்டான் திருநக்ஷத்ரமும் சேர்ந்து அந்த உத்ஸவத்தின் ஒரு பாகமாகவே ஆய்விடுவதும், முதலியாண்டான் திருநாமத்தை விளங்க வைக்கும் நமது ஸ்வாமியின் கைங்கர்யப்புகழும் பேசத்திகட்டாதவை. நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

(ஸ்ரீரங்கத்தில் நமது பெரியஸ்வாமி வர்த்தமான ஸ்வாமி இருவருமான முதலியாண்டான் ஸ்வாமி ப்ராதாக்கள் அத்யாபக கைங்கர்யம் ஸ்ரீபாதம் தாங்கும் கைங்கர்யம் இவற்றில் ஈடுபடு வதைப் பலர் புகழ்ந்து கூறக் கேட்டு அடியேன் உருகியதுண்டு. இந்த வ்யாஸத்தைத் திருமாளிகை சிஷ்யர்கள் யாவரும் படித்து நமது ஸ்வாமி காட்டும் வழியில் கைங்கர்யத்தில் அந்வயிக்க முயல வேண்டும்—ஆசிரியர்)

---

## ஷஷ்டியப்த பூர்த்திமலர் வெளியீடு.

ஸ்ரீமுதலியாண்டான் திருவவதார நன்னாளான சித்திரைப் புநர்வஸு (29—4—1982) அன்று பச்சை வாரணப் பெருமாள் கோவில் (பேட்டை) முதலியாண்டான் அவதாரஸ்தல மண்டபத் தில் அவர் திரு முன்பே நமது ஸ்வாமியின் ஷஷ்டியப்தபூர்த்தி சிறப்பு மலர் நமது ஸ்வாமியால் வெளியிடப்பட்டது. முதல் ப்ரதி யை தேவஸ்தான பரம்பரை தர்ம கர்த்தா ஸ்ரீமான் வரதப்ப முதலியார் பெற்றுக் கொண்டார். மானேஜர் ஸ்ரீமான் ஹிரண்ய முதலியார் உடனிருந்து வெளியீட்டு விழாவை நடத்திவைத்தார்

சிஷ்யர்கள் ஸபைச் செயலாளர் Dr. V. V.ராமாநுஜன் உத்ஸவ த்திற்கு வந்திருந்த பாகவதோத்தமர்களை வரவேற்று, ஸ்வாமியை மலரை வெளியிடும் படி ப்ரார்த்தித்தார். மலர் வெளியீடான பின் ஸ்ரீ உ வே. செந்தமிழ் வேதியர் குமாரவாடி ராமாநுஜாசாரியார் ஸ்வாமி பெருமக்கள் என்ற தலைப்பில் சுருக்கமானதொரு உபன்யா ஸம் ஸாதித்தார். ஸ்ரீமான் K. B, தேவராஜன் நன்றி கூற இவ் விழா இனிதே முடிவடைந்தது.

கூடிய சீக்கிறத்தில் மலர் பிரதிகளை முன்பணம் அனுப்பிப்பதிவு செய்துள்ளவர்களுக்கு அனுப்புகிறோம். வெளியீடு—முன் விலையில் இனி மலரை அனுப்ப இயலாது, இதன் விலை ரூ 10—00 என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர்.

## நமது ஸ்வாமியின் ஸஞ்சார விவரங்கள்

### 1. சிங்கப் பெருமாள் கோவில் பிரம்மோத்ஸவம்

நமது திருமாளிகை கூடஸ்தரான ஸ்வாமி அண்ணாவிலப்பனுக்கு ஸ்ரீபாடலாத்ரி நரசிம்மப்பெருமாள் கனவில் தோன்றித்தன் கோவிலை புதுப்பிக்கும் படி நியமித்து இவர் மூலம் பல கைங்கர்யங்களைக்கண்டருளினன் இந்த ஸன்னிதியில் முதல் தீர்த்தம் முதலான விசேஷ சிறப்புகளை நமது ஆசார்ய ஸ்வாமிகள் பாரம்பர்யமாக அநுபவித்து வருகிறார்கள். இங்கு கோவில் கொண்டுள்ள சிங்கப் பிரானும் ஆசார்யர்களுக்கு ப்ரத்யக்ஷ தெய்வமாக அநுக்ரஹித்து வருகிறான். 26–5—82 முதல் 4—6—82 வரை இங்கு ப்ரம்மோத்ஸவத்தில் ஸ்வாமி எழுந்தருயிருந்து பரம்பராப்ராப்தமான கைங்கர்யங்களை நிர்வஹித்தருளுவார்.

அத்யாபக வேதபாராயண கோஷ்டிகளுக்கு தக்க ஸ்வாமிகளை அழைத்து ததீயாராதனம் ஸம்பாவனைகள் முதலியன ஸ்வாமிதாமே நடத்தி வைக்கிறார். இதற்காக பொருளுதவி செய்ய விரும்புமவர்களை ஸ்ரீ கோ. க. வா அ. குமார வேங்கடாசாரியார் ஸ்வாமி, ஸ்ரீ முதலியாண்டான் திருமாளிகை, சிங்கப் பெருமாள் கோவில் 603 204 என்ற முகவரிக்கு அனுப்பி ஆசார்யா நுக்ரஹத்தைப் பெறும்படி பிரார்த்திக்கிறேன். 1 6—1982 அன்று நமது பெரிய ஸ்வாமி தீர்த்தம் (பரமபதம் எய்தியநாள்). இதையொட்டி ஸேவை சாற்றுமறை ஸ்ரீபாததீர்த்த விநியோகம் முதலியன சிங்கப்பெருமாள் கோவில் திருமாளிகையில் நடைபெறும். ஆசார்யனின் தீர்த்த தினத்தைக் கொண்டாடுவது சிஷ்யர்கள் அவசியம் செய்ய வேண்டுவதொன்று ஆகையால் ஜுன் 1உ காலையில் இந்த கோஷ்டிக்கு வந்திருந்து ஸ்வரூபநிறம் பெறும்படி வேண்டுகிறேன்.

### 2. பெருமாள் கோவில் வைகாசத் திருவிழா

ஸ்ரீகாஞ்சி தேவப்பெருமாளின் வையங்கண்ட வைகாசிப் பெருவிழாவான பிரம்மோத்சவம் 3—6_82 தொடங்கி நடைபெற இருக்கிறது. நமது ஸ்வாமி 5–6—82 (கருடஸேவை) அன்று சிங்கப்பெருமாள் கோவிலிலிருந்து இங்கு எழுந்தருளி அத்யாபக கைங்கர்யத்தில் தொடர்ந்து அந்வயிப்பார். நமது திருமாளிகை சிஷ்ய சபையார் பலபல ஆண்டுகளாக ஸேவார்த்திகளுக்கு ஸன்னிதி வீதியில் உள்ள நமது ஸ்வாமி திருமாளிகையில் ததீயாராதனம் நடத்திவருவது யாவருமறிந்ததே. இதற்கான பொளுதவியை [பொருளாளர், ஸ்ரீ K. K. V. A. சபா, முதலியாண்டான் திருமாளிகை 51-B சன்னிதி வீதி, காஞ்சிபுரம் 613 503] என்ற முகவரிக்கு அனுப்பி ஆசார்ய முகோல்லாஸகரமான இந்த கைங்கர்யத்தில் பங்குபெறும்படி வேண்டுகிறேன்.

திருமாளிகை சிஷ்யர்கள் ஸபைச் செயலாளன்

V. V, ராமாநுஜன்

# முமுக்ஷு

## Dr. S. ப்ரஸன்னம்

(7-ம் இதழிலிருந்து தொடர்ச்சி)

கம்பனுடைய குகன்,

'எண்ணெ உண்ட இருள்புரை மேனியான்
மச்சொடு ஆர்த்த கறைக்கதிர் வாளினன்
நச்சு அரவின் நடுக்குறு நோக்கினன்''
பக்கத்தில் வந்தால், ஊற்றமே மிக ஊனேடு மீன்நுகர்—நாற்றம்''
அவன் பார்வை?....நெரித்த புருவத்தான் நகையில் முகத்தினன்,
சீற்றம் இன்றியும் தீஎழ நோக்குவான்.'
குரலோ—நீர்முகில் இடியினேடு எழுந்தாலன்ன கூற்றம் அஞ்சக் குமுறும் குரலினன்.''

இந்தத் தோற்றத்திற்கேற்ப, 'போர்க்குகன் என்னும் நாமத்தான்'

இதற்குமேல் இல்லை என்னும்படியான கருத்தநிறம், வேட்டையாடிக்கொன்ற ஜந்துக்களின் ரத்தக்கறை வாளில் இருக்கிறது. அதைத்துடைக்கக்கூட இல்லை; பார்த்தால் கொடிய விஷப் பாம்பைப் பார்ப்பது போல் நமக்கு நடுக்கம் ஏற்படும்; செய்யும் தொழிலுக்கு உற்ற நாற்றம்; கோபம் இல்லை; இருந்தாலும் சிரிப்பு இல்லாத, கனிவு இல்லாத கருணையே காட்டாத கொடிய பார்வை; குரல் இடிமாதிரி....இப்படிப்பட்ட குகனுக்கு ஸ்ரீராமன் இரங்கியதை திருமங்கையாழ்வார் பாடுகிறுர்:-

ஏழை ஏதலன் கீழ்மகனென்னது
இரங்கி, மற்றவர்க்கு இன்னருள் சுரந்து,
மாழை மான்மட நோக்கி, உன் தோழி.
உம்பி எம்பியென்றெழிந்திலை, உகந்து
தோழன் நீ எனக்கு இங்கொழியென்ற
சொற்கள் வந்து; அடியேன் மனத்திருந்திட,
ஆழிவண்ண! நின்னடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே!

அப்படிப் போர்க் குகனுக வந்தவன் மேல் சீதையுடன் கூடிய ஸ்ரீ ராமனுடைய பார்வை விழுந்ததும் அவனே ''ஸ்ரீ குகப் பெருமாள்'' ஆகிருன்.

''குலம் தரும், செல்வம் தந்திடும்'' எனத் தொடங்கி நாராயணு என்னும் நாமம் அளிக்கும் நலன்களை இரு பெரிய பட்டியல் போட்டு காட்டுகிருர் திருமங்கையாழ்மார். வாசகத்திற்கே (பெயருக்கே) இந்த சக்தி என்ருய் வாச்யத்திற்கு (மூர்த்திக்கு) சக்தி சொல்லிலடங்குமோ?

குகன் தனக்காக ஏதாவது வரம் வேண்டி ஸ்ரீ ராமனிடம் வந்தானு? விலையுயர்ந்த முத்தும் மணியும் காணிக்கையாகக் கொடுத்தானு? இல்லை, மாருக தன் அளவு கடந்த அன்பை எம்பெருமானிடம் வைத்து வந்தான். அவன் தன்னிடம் வந்தது ஒன்றையே கொண்டு, மற்ற தகுதிகள் ஏதும் பாராமல், அவனை ஆட்கொண்ட ஸ்ரீ ராமனின் க்ருபை, என் மனதை ஊக்குவிக்க, "நானும் உன்னிடம் வந்தேன் என்கிருர் ஆழ்வார். உண்மையில், அது நமக்கு சந்தேகங்களைப் போக்கி, எம்பெருமானிடம் மனதைச் செலுத்த ஊற்றம் கொடுக்கிறது.

எப்படி இருந்தாலும் குகன் மனிதன். அதனுல் அவனுக்கு இறையருள் கிடைத்தது. மற்றவர்களுக்கு அப்படி கிடைக்குமா? என்ற கேள்விக்கு பதில் சொல்வது போல் அமைகிறது அடுத்த மூன்று பாசுரங்கள். ''வாதமாமகன்'' பாசுரத்தில் அனுமானுக்கு, தன்னுடன் ஒரே இலையில் போஜனம் செய்யும்படியான, வேறு எவருக்கும் எப்பொழுதும் கிடைக்காத பெரும் பேறு அருளியதையும், ''கடிகொள் பூம்பொழில்'' பாசுரத்தில் யானைக்கு அருள் சுரந்ததையும் ''நஞ்சு சோர்வதோர்'' பாசுரத்தில் விஷப்பாம்பிற்கு தன்னுடைய வாகனமான கருடனின் இயற்கைப் பகை நீங்கி, கருடனே அப்பாம்பைக் காப்பாற்றி வரச்செய்ததையும் காட்டுகிருர்.

இனி, மோக்ஷம் மட்டும் அல்லாது வேறு எல்லா வரங்களையும் அருள வல்லவர் எம்பெருமான் என்று காட்டும் அடுத்து வரும் பாசுரங்கள்.

**''மாக மாநிலம் முழுதும் வந்திறைஞ்சும்**
**மலரடி கண்ட மாமறையாளன்,**
**தோகை மாமயிலன்னவரின்பம்**
**துற்றிலாமையில், அத்த! இங்கொழிந்து.**

**போகம் நீயெய்திப் பின்னும் நம்மிடைக்கே**
**போதுவாயென்ற பொன்னருள், எனக்கும்**
**ஆகவேண்டுமென்று அடியிணையடைந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே!**

மாமறையாளனான கோவிந்தஸவாமி என்ற அந்தணன், கல்வி கேள்விகளில் மிக உயர்ந்தவர்—அவரது ஆழ்ந்த ஞானத்தையும், அதற்கேற்ற மிக வைராக்யமான வாழ்க்கை முறையையும் மெச்சி, அவர் மனதில் பெருமாள் தோன்றி "என்ன வரம் வேண்டும்" கேட்டார். கோவிந்தஸ்வாமி க்ருஷ்ணவதாரத்தில் எம்பெருமானுடைய லீலைகளைக்காண வேண்டும் என்று விருப்பம் தெரிவிக்க, எம்பெருமானும் அந்த லீலைகளை அவருக்குக் காட்டினார். அதற்கு மேலும் "என்ன வரம் வேண்டும்" என்று எம்பெருமான் கேட்க, ஒழிவில் காலமெலாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும்படி, தன்னை, வைகுண்டத்திற்கு உடன் அழைத்துக் கொள்ள வேண்டினார். எம்பெருமான் 'உனக்கு வைகுண்டம் இப்பொழுது வேண்டாம். உன் உள்ளத்தில் இவ்வுலக போகங்களை அனுபவியாமல் விட்டோமே என்ற ஏக்கம் இருப்பதால் நீ கொஞ்ச காலம் இங்கே இருந்து சுகபோகங்களை அநுபவித்துவிட்டு பிறகு என்னிடம் வந்து சேருவாய்" என்று அருளி மறைத்தார். இவ்வரலாற்றில், கோவிந்த ஸ்வாமி, வாயால் வைகுண்டம் வேண்டினாலும் அவர் உள்ளத்தில் இருக்கும் கருத்து அறிந்து, அவருக்கு, வேண்டியதை எம்பெருமான் கொடுத்தான் என்பதைக்காண்கிறோம்.

நமக்கு, விசேஷமாக சுகங்கள் இங்கே அநுபவிக்க, பெரியதாக வசதிகள் ஏதும் இல்லை. வயது காரணமாக, காது சரியாக கேட்கவில்லை. கண்பார்வை மங்கி விட்டது. நடையில் தடுமாறல். பிரியமாக வார்த்தை சொல்லி அன்புடன் தேவைகளை கவனிக்க யாரும் இல்லை. சுற்றத்தார் "வயதாயிற்று—போய்ச் சேரவேண்டியது தானே" என்று சொல்லாக்குறை. இப்படி இருக்கும் நாம் "எனக்கு வாழ்க்கையில் ஆசையே இல்லை. பெருமாளை தினமும் திருவடியில் சேர்த்துக் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டு இருக்கிறேன். அவர் காதில் போட்டுக் கொள்ளவில்லை" என்று சொல்கிறோம், பலர் சொல்லவும் கேட்கிறோம். ஆனால் எம்பெருமான் ஏன் செவிசாய்க்கவில்லை என்றால் "உள்ளுவாரி உள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறியும்" அவருக்கு, நாம் தினம் கேட்பதெல்லாம் உதட்டிலிருந்து வரும் வார்த்தைகள் தான் என்று தெரியாதா? உண்மையாக உள்ளம் உருகிச் செய்யும் பிரார்த்தனைகளுக்கு மட்டுமே எம்பெருமான் இரங்குவார் என்று, நமக்கு விசேஷப்பாடம் புகட்டும் இப்பாசுரம்.

கோவிந்தஸ்வாமிக்கு உலக சுகங்களை அருளிய எம்பெருமான், மார்க்கண்டேயனுக்கு யமபயத்தை நீக்கி, என்றும் பதினாறாக அருளியதைக் காட்டும் ''மன்னு நான்மறை'' என்ற பாசுரம்,

அடுத்த ''ஓது வாய்மை'' பாசுரத்தால் க்ருஷ்ணாவதாரத்தில் குருவாய் இருந்து சாஸ்திரங்களைக் கற்பித்த சாந்தீபினியினுடைய, என்றோ மாண்டுபோன பிள்ளையை உருமாறாமல் எம்பெருமான் கொணர்ந்ததைக் காட்டுகிறார்.

ஒரு வேதம் ஓதும் அந்தணனுடைய மனைவிக்குக் குழந்தை பிறந்தவுடன், அக்குழந்தையை தாயின் கண்ணில் காட்டாமல், ஒரு தேவதை எடுத்துக் கொண்டு போய்விடும். இப்படி மூன்று முறை நடந்து விட்டது. அவளது நான்காவது கர்ப்பத்தில் பிறந்த குழந்தையைக் காப்பாற்றியதுமல்லாமல் முன் மறைந்த மூன்று குழந்தைகளையும் கொண்டு வந்து கொடுக்கிறார் எம்பெருமான் என்று சொல்கிறார் ''வேத வாய்மொழி அந்தணன்'' பாசுரத்தில். தொண்டைமான் சக்ரவர்த்திக்கு அருள் புரிவதைப் பாடும் 'துளங்கு நீண்முடி'' பாசுரம்.

இப்படி மனிதன், விலங்கு, மனிதரில் சாமானியன், சக்ரவர்த்தி என்றெல்லாம் வித்யாஸம் பார்க்காமல் அவரவர் முழுமனதுடன் வேண்டியதை அருளுவார் எம்பெருமான் என்று தெளிவாகவே காட்டப்பட்டிருக்கிறது. ஆனாலும், மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையே அருளவல்ல ஸர்வேச்வரனிடம், இப்படி அல்பமான பலன்களைக் கேட்க வேண்டுமோ? என்ற கேள்வி யார் மனதில் எழுகிறதோ அவரே முமுக்ஷு. ★

## ஸ்ரீமந் நாதமுனிகள் அவதாரஸ்தல திருமாளிகை ஜீர்ணோத்தாரணம்

நம் தரிசனத்தில் பெரிய முதலியார் என்று ஆசாரியரில் தலைவராய் விளங்குமவர் ஸ்ரீமந்நாத முனிகள். இவருடைய அவதாரஸ்தல திருமாளிகை காட்டுமன்னார் கோவிலுக்கருகில் சதுர்வேத மங்கலத்தில் உள்ளது. மிகவும் ஜீர்ணமான நிலையில் உள்ள இதைப் புதுபித்து நாதமுனிகளின் திவ்யமங்கள விக்ரஹத்தை ப்ரதிஷ்டை செய்விக்க சுமார் ரூ 70,000-00 ஆகும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. இதற்கான திருப்பணிக் குழு ஸ்ரீ A. V. ரங்காசார்ய ஸ்வாமி தலைமையில் அமைக்கப்பட்டுள்ளது ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவரும் இத் திருப்பணியில் பங்கு கொள்ள வேண்டும். ஸஹகாரம் அனுப்ப முகவரி—ஸ்ரீ ஸ்ரீநிவாசநாராயணன், பொருளாளர், திருப்பணிக்குழு, ஸன்னிதி வீதி காட்டு மன்னார் கோவில், 608 301.



ஏகாதசி வெள்ளிக்கிழமை பெருமாள் தாயார் புறப்பாட்டில் இயல் கோஷ்டி
வலது கோடியில் நமது ஸ்வாமி. படம் நன்றி—ஸ்ரீராமாநுஜன், காஞ்சி

